# அகத்தியர்
# தமிழ் வாசகம்

மூன்றாம் வகுப்பு






ர் புத்தக சாலை

ளம், திருச்சி.

# அகத்தியர் தமிழ் வாசகம்

## மூன்றும் வகுப்பு

ஆக்கியோர்
வித்துவான் R. துரைசாமி
தலைமைத் தமிழாசிரியர், பிஷப் ஹீபர் உயர்நிலைப்பள்ளி,
தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி.

K. நாகராஜ ராவ்
ஓய்வு பெற்ற தமிழாசிரியர், திருச்சிராப்பள்ளி.

[Paper used : 24 lbs. White Printing.]

அகத்தியர் புத்தகசாலை
தெப்பக்குளம் : : திருச்சிராப்பள்ளி

 1958 [விலை 55 ந.பை.

# முகவுரை

அகத்தியர் தமிழ் வாசகம் என்னும் எமது புத்தக வரிசையுள் இஃது மூன்றுவது ஆகும்.

அரசியலார் திருத்திய பாடத்திட்டத்தின்படி இப்புத்தகம் அழுந்திய அறிவும் (அநுபவமும்) திருந்திய தேர்ச்சியும் உள்ள ஆசிரியர்களால் எழுதப்பட்டுள்ளது. மாணவர்களின் வயதிற் கேற்பப் பாடங்களும், செய்யுட்களும், பயிற்சிக ளும் அமைக்கப்பட்டுள்ளன. சொற்களும் மாண வர்களின் மனநிலைக்கேற்றவையே.

காலப்போக்கினையும் நம் தமிழ்மொழியின் வளர்ச்சியினையும், மாணவர் நலத்தினையும் கருத் திற்கொண்டு எழுதப்பட்டுள்ள இப்புத்தகத்தைப் பள்ளிப் பொறுப்பாளர்களும் ஆசிரியர்களும் தங்கள் பள்ளிகளில் பாடப்புத்தகமாக வைத்து எம்மை ஊக்குமாறு அன்புடன் வேண்டுகின்ற

ஆசிரியர்கள்.

# மூன்றாம் வகுப்பு

## பொருளடக்கம்

பக்கம்

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாகே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே

## தேசீய கீதம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும்
ஆட்சி செலுத்துகிருய்.

நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது ;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன ;
நின் புகழைப் பாடுகின்றன ;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

வெற்றி, வெற்றி, வெற்றி.

# 1. தமிழ்

நாம் பேசுவது தமிழ் மொழி. தமிழே நமது தாய் மொழி. குழந்தைப் பருவத்தில் நாம் முதன் முதலில் நம் பெற்றோர்களை 'அப்பா, அம்மா' என்று தமிழில்தான் அழைத்தோம். தாயார் நம்மைத் தாலாட்டப் பாடியதும் தமிழ். தாயார் நம்முடன் கொஞ்சிப் பேசியதும் தமிழ். தகப்பனர் நம்முடன் குலாவியதும் தமிழ். எதையும் நாம் தமிழிலேயே நினைக்கிறோம். நம் எண்ணங்களைத் தமிழிலேயே பிறரிடம் தெரிவிக்கிறோம். நம்முடைய அறிவை வளர்ப்பதும் தமிழ் மொழி. நம்மைப் பெற்ற தாயைப் போலவே நாம் தமிழ்த் தாயைப் போற்ற வேண்டும். நம்முடைய தாய் மொழியாகிய தமிழின் சிறப்பைப் பற்றி நாம் சிறிது தெரிந்து கொள்வோம்.

தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். தமிழ் மொழி பேசுவதற்கு இனிமையானது. கற்றுக் கொள்வதற்கும் மிகவும் எளியது. எல்லாப் பொருள்களுக்கும் தமிழில் சொற்கள் உண்டு. நம் தமிழ் மொழி நல்ல இலக்கணம் உடையது. சிறந்த இலக்கியங்கள் பலவும் நம் தமிழில் இருக்கின்றன.

நாம் வாழ்வது தமிழ் நாடு. தமிழ் நாட்டை முற்காலத்தில் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று அரச மரபினர்கள் ஆண்டு வந்தார்கள். அந்த மூவரும் தமிழைத் தம் உயிர் போல் எண்ணி

வளர்த்து வந்தார்கள். அவர்களில் பாண்டிய மன்னர்கள் மதுரையிலிருந்து அரசாண்டார்கள். அவர்கள் தமிழ்ச் சங்கம் நடத்தி வந்தார்கள். அச் சங்கத்தில் புலவர் பலரைக் கொண்டு தமிழை வளர்த்து வந்தார்கள். பாண்டியர்கள் அப்புலவர் களுக்கு உணவும், உடையும், பொருளும் தந்து அவர்களைப் போற்றினர்கள். அந்தப் புலவர் களுக்குச் சங்கப் புலவர்கள் என்று பெயர். அவர்கள் தமிழ்ப் பாடல்கள் பல இயற்றி மக்களுக்கு உதவினர்கள். அப்பாடல்கள் மிக்க இனிமை யானவை.

முற்காலத்தில் சங்கப் புலவர்களைத் தவிர தமிழ்ப் புலவர்கள் பலர் தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் திருவள்ளுவர் என்பவர் ஒருவர். அவர் திருக்குறள் என்ற ஒரு சிறந்த நூலை இயற்றினர். திருக்குறளை எல்லோரும் படித்துப் பாராட்டுகிருர்கள்.

ஔவையார் என்னும் ஒரு பெண்பாற் புல வரும் முன் காலத்தில் இருந்தார். அவர் பல நீதி நூல்களை இயற்றியிருக்கிருர். அவை ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி முதலியன. ஔவையார் இயற்றிய நூல்களைச் சிறியவர்களும் படிக்கலாம்; பெரியவர்களும் படிக் கலாம். கம்பர் என்பவர் ஒரு சிறந்த புலவர். கவிகள் பாடுவதில் அவர் மிக வல்லவர். கம்ப ருக்குக் கவியரசர் என்ற சிறப்புப் பெயரும் உண்டு.

இக்காலத்திலும் தமிழ்ப் புலவர்கள் பலர் வாழ் கின்றனர். அவர்களும் புதிய பல நூல்களைத் தமிழில் இயற்றி வருகிருர்கள்.

பிள்ளைகளே, நீங்கள் சிறுவயதிலிருந்தே தமிழை விரும்பிப் படியுங்கள். இனிய தமிழ்ச் சொற்களில் பேசுங்கள். உண்மைத் தமிழராக வாழுங்கள்.

| | | |
|---|---|---|
| தாய் மொழி | குலாவியது | போற்ற வேண்டும் |
| குழந்தைப் பருவம் | ஆண்டனர் | எளிதானது |
| மரபினர் | அரசு | இலக்கியம் |
| மன்னர் | வல்லவர் | இலக்கணம் |

### கேள்விகள்

1. தமிழ்த் தாயை எவ்வாறு போற்ற வேண்டும் ?
2. திருவள்ளுவர் இயற்றிய சிறந்த நூல் எது ?
3. தமிழரசர்கள் தமிழை எப்படி வளர்த்தார்கள் ?
4. கவியரசர் என்பவர் யார் ?
5. நீங்கள் எவ்வாறு வாழ வேண்டும் ?

## இலக்கணம்

### எழுத்துக்களின் பெயர்கள்

1. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ— இந்த எழுத்துக்கள் பன்னிரண்டுக்கும் **உயிர் எழுத்துக்கள்** என்று பெயர்.

2. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—இந்த எழுத்துக்கள் பதினெட்டுக்கும் **மெய் எழுத்துக்கள்** என்று பெயர்.

3. ஃ—இந்த எழுத்துக்கு **ஆய்த எழுத்து** என்று பெயர்.

4. க, கா முதலிய மற்ற 216 எழுத்துக்களுக்கு உயிர் மெய் எழுத்துக்கள் என்று பெயர். ஆகத் தமிழ் எழுத்துக்கள் மொத்தம் 247.

## 2. தமிழ் வணக்கம்

('பச்சைமலை பவளமலை' என்ற மெட்டு)

1. அன்னையென்னைத் தொட்டிலிட்டே
   அன்புடன் தாலாட்டி
   ஆசையுடன் கொஞ்சியதும்
   அருமை மிகும் தமிழே.
   இன்பமுடன் என் தந்தை
   இருகையில் ஏந்தி
   என்னுடன்கு லாவியதும்
   எங்களது தமிழே.

2. வள்ளுவரும் கம்பருமே
   வளர்த்த தெங்கள் தமிழே
   வளமிக்க இலக்கணங்கள்
   வாய்ந்ததெங்கள் தமிழே.
   தெள்ளுமொழி ஒளவை முதல்
   சிறந்த பல புலவர்
   செப்பிய நல் நீதியினல்
   சிறந்த தெங்கள் தமிழே.

3. உலகமது உள்ளளவும்
   உள்ளதெங்கள் தமிழே
   உத்தமராம் முனிவரெலாம்
   உவந்ததெங்கள் தமிழே.
   இலகுபல கலைகளெலாம்
   ஈந்ததெங்கள் தமிழே
   என்றுமதன் அடிவணங்கி
   இன்புறுவோம் யாமே.

—ரா. து. கம்பதாசன்



## 3. பருத்திச் செடியும் நூல் நூற்றலும்

உணவுக்கு அடுத்தபடியாக நமக்கு வேண்டியது ஆடை. 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்று சொல்வார்கள். இந்த ஆடையை நமக்குத் தருவது பருத்திச் செடி.

பருத்திச் செடி கரிசல் மண்ணில் நன்ருக வளரும். இதற்குத் தண்ணீர் மிகுதியாகத் தேவையில்லை. பெரும்பாலும் மழையினுலேயே வளரும். இச்செடி சுமார் ஐந்தடி வரை வளரும். செடிகளில் காய்கள் காய்க்கும். முற்றியவுடன் காய்கள் வெடிக்கும். உடனே அவைகளைப் பறித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் பருத்தி காற்றில் பறந்து போகும். பருத்திக் காய்களுக்குள் கொட்டைகளும், பஞ்சும் நிறைந்திருக்கும். முதலில் பருத்திக் கொட்டைகளையும் பஞ்சையும் பிரித்து எடுக்க வேண்டும்.

பிறகு அப்பஞ்சினைத் தூசு போக்கிச் சுத்தம் செய்யவேண்டும். சுத்தமான பஞ்சைப் பட்டை களாகப் போடவேண்டும். அந்தப் பட்டையி லிருந்து நூல் நூற்க வேண்டும்.

நூல் நூற்கப் பயன்படும் கருவிகள் தக்கிளி, இராட்டை என்பன. வீதியில் போகும்போது



கூடச் சிலர் தக்கிளியில் நூற்றுக் கொண்டு போவதை நீங்கள் பார்க்கலாம். ஆனால் இராட்டை யிலோ ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு பொறுமையாக நூல் நூற்க வேண்டும்.

இராட்டைகளில் பற்பல மாதிரிகள் வெளி வந்திருக்கின்றன. இராட்டையில் ஒரு சிறிய சக்கர மிருக்கும். அதில் உள்ள ஒரு சிறு குச்சியைப் பிடித்துக்கொண்டு சுழற்றி நூல் நூற்பார்கள். இதில் விரைவாக நூற்கலாம். நூற்பதும் எளிது.

நூலிழையும் மெல்லியதாய் இருக்கும். முன் காலத்தில் பெரும்பாலும் பெண்கள் ஓய்வு நேரங்களில் நூற்பது வழக்கம். பலர் இத்தொழிலை ஒரு துணைத் தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார்கள் இக்காலத்திலும் சிலருக்கு இது ஒரு துணைத் தொழிலாக இருக்கிறது.

நூல் நூற்பதனுல் பொறுமையும் கவனமும் உண்டாகும். இது ஒரு சிறந்த கைத்தொழிலுமாகிறது. எல்லோரும் நூல் நூற்பது நல்லது. நம் நாட்டில் பலர் நூல் நூற்ருல் துணிப் பஞ்சம் இராது. வெளி நாட்டுத் துணிகளை வாங்க வேண்டியதுமில்லை. இதனுல்தான் காந்தி அடிகள் நம் எல்லோரையும் நூல் நூற்கச் சொன்னுர். அவரும் நூற்று வந்தார்.

இவ்வாறு நூற்கும் நூலுக்குக் கதர் நூல் என்று பெயர். கதர் நூலினுல் நெய்யப்படும் ஆடைக்குக் கதர் ஆடை என்று பெயர். கதர் ஆடைகள் மிகச் சிறந்தவை. நூற்கும் தொழிலை நாம் வளர்க்க வேண்டும். சிறுவர், சிறுமிகள், பெரியவர்கள் ஆகிய எல்லோரும் நூற்பது நல்லது.

| | | |
|---|---|---|
| தக்கிளி | பொறுமை | ஆடை |
| கதர் | விரைவாக | இராட்டை |
| பற்பல | பருத்தி | முற்றியவுடன் |
| எளிது | பஞ்சு | கரிசல்மண் |
| இழை | நிறைந்திருக்கும் | கவனம் |
| வெடிக்கும் | பட்டைபோட | நூற்க |
| ஓய்வு நேரம் | துணிப் பஞ்சம் | வாழ்க்கை |

### கேள்விகள்

1. நமக்கு உணவுக்கு அடுத்தபடியாக வேண்டியது எது ?

2. பருத்திக் காய்க்குள் என்னென்ன நிறைந்திருக்கும் ?

3. நூற்கப் பயன்படும் கருவிகள் யாவை ?

4. எந்த ஆடைக்குக் கதர் ஆடை என்று பெயர் ?

5. நூற்பதால் என்னென்ன நன்மைகள் உண்டாகும் ?

## இலக்கணம்

### பெயர்ச் சொல்

மனிதன், யானை, மரம், கிளி, செடி, பெண், புத்தகம், நாற்காலி, பந்து, பெட்டி முதலியவை பொருள்களின் பெயர்கள். இவ்வாறு பொருள்களின் பெயர்களைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல் ஆம்.

கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள பொருள்களின் பெயர்களை எடுத்துச் சொல்லு :—

1. கோவிந்தன் தேங்காய் வாங்கினான்.
2. பொன்னி பால் கறக்கிறாள்.
3. யானை வீதியில் வருகிறது.
4. குதிரை வண்டியை இழுக்கும்.
5. கிளி அழகான பறவை.
6. பெட்டியின்மேல் புத்தகம் இருக்கிறது.

# 4. சோம்பேறிப் பையன்

காலை ஒன்பதரை மணி. பிள்ளைகளெல்லாம் விரைவாய்ப் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருக்கிறார்கள். கந்தனும் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான். சிறிது தூரம் போனான். பிறகு பள்ளிக்கூடம் போக அவனுக்கு விருப்பமில்லை. விளையாட வேண்டுமென்று எண்ணினான். ஆனால் அவனுடன் விளையாடுவதற்கு ஒரு பிள்ளையும் கிடைக்கவில்லை. அதனால் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டே நின்றான்.



அவ்வேளை ஒரு பசு அவ்வழியே போயிற்று. கந்தன் அப்பசுவை விளையாட அழைத்தான். அது "நான் மேயப் போக வேண்டும்; அதனால், எனக்கு விளையாட நேரமில்லை" என்று சொல்லிப் போய் விட்டது.



பிறகு எறும்புகள் வரிசை வரிசையாகப் போய்க் கொண்டிருந்ததைக் கந்தன் பார்த்தான். 'நீங்கள் என்னுடன் விளையாட வருகிறீர் களா ?' என்று கேட் டான். அவைகள், "நாங்கள் தானியம் சேர்க்கவேண்டும். அதற்காக விரைவா கப் போய்க்கொண் டிருக்கிறோம். ஆத லால் நாங்கள் விளை யாட முடியாது" என்று சொல்லிப் போய்விட்டன.



அதன் பிறகு தேனீக்கள் பறந்து கொண் டிருந்ததைப் பார்த் தான். தேனீக்களே! நீங்கள் தயவுசெய்து என்னுடன் விளை யாட வாருங்கள்" என்றான். அவை "நாங்கள் தேனைச் சேர்க்க வேண்டும்" என்று சொல்லிப் போய்விட்டன.



பின்பு ஒரு நாய் அங்கு ஓடி வந்ததைப் பார்த்தான். "நாயே! நீயாவது தயவுசெய்து என்னுடன் விளையாட வா!" என்று கூப்பிட்டான். அது, "நான் என்

எசமானன் வீட்டைக் காக்கவேண்டும். அதற்காக நான் விரைவாக ஓடிக்கொண்டிருக்கிறேன். நீ பள்ளிக்கூடம் போக வேண்டிய நேரத்தில் விளையாடக் கூப்பிடுகிருயே. உனக்கு அறிவு இல்லையா?'' என்று சொல்லிப் போய்விட்டது.



உடனே கந்தனுக்கு அறிவு வந்தது. "பசு முதலிய எல்லாம் அதனதன் வேலையைச் செய்யப் போகின்றன. நான் மட்டும் பள்ளிக்கூடம் போக வேண்டிய நேரத்தில் விளையாடலாமா! இது தவருயிற்றே! ஆதலால் இப்பொழுதே நான் பள்ளிக்கூடம் போகவேண்டும்'' என்று அவன் எண்ணினுன்; அப்படியே போனுன்; நன்ருகப் படித்தான்; நல்ல நிலைமைக்கு வந்தான்.

| | | |
|---|---|---|
| வேண்டுமென்று | தேனீ | அங்குமிங்கும் |
| தானியம் | தவறு | நேரமில்லை |
| வரிசைவரிசையாக | கிடைக்கவில்லை | தயவுசெய்து |
| நிலைமை | அறிவு | விரைவாய் |

### கேள்விகள்

1. கந்தன் ஏன் பள்ளிக்கூடம் போகவில்லை?
2. கந்தன் எவைகளை விளையாடக் கூப்பிட்டான்?
3. எறும்பு சொன்னதைச் சொல்லு.
4. நாய் கந்தனுக்கு என்ன சொல்லிற்று?
5. கடைசியாக அவன் என்ன எண்ணினுன்?

# 5. மழை

அம்மா அடுப்பில் உலே வைக்கிருள். மேலே மூடுகிருள். அரிசியைக் கழுவுகிருள். அதைப் போடுவதற்கு உலே மூடியைத் திறக்கிருள். உடனே குபுகுபு என்று ஆவி மேலே போகின்றது. ஆவி மேலே போவதை நீங்கள் வீட்டில் ஒவ்வொரு நாளும் பார்க்கிறீர்கள். இதனுல், நெருப்பினுல் நீர் கொதிக்கிறது; கொதிக்கக் கொதிக்க நீர் ஆவி யாக மேலே போகிறது என்பதை நாம் அறிகிருேம்.

பல வீடுகளின்மேல் கூரை யிருக்கும். சில வீடுகளின்மேல் ஒடு போடப்பட்டிருக்கும். மழை பெய்யும்பொழுது இவை நனேந்துவிடும். பிறகு வெயிலில் காயும். அப்பொழுது கூரையிலிருந்தும், ஒட்டிலிருந்தும் ஆவி புகை போல மேலே போவ தையும் நீங்கள் பார்த்திருக்கலாம்.

நாம் ஈரத்துணிகளே உலர்த்துகிருேம். அதி லுள்ள தண்ணீர் எங்கே போகிறது? துணி எப்படி உலருகிறது? துணியிலுள்ள தண்ணீரைச் சூரிய வெப்பம் ஆவியாக மாற்றி விடுகிறது. அதனுல் துணி உலர்ந்துவிடுகிறது.

இவைகளேப் போலவே கிணறு, குளம், குட்டை, ஆறு, ஏரி, கடல் இவைகளிலுள்ள தண்ணீரும் சூரிய வெப்பத்தால் ஆவியாக மாறு கிறது. ஆவி இலேசானது. அதனுல் அந்த ஆவி மேலே செல்கிறது. காற்று, தான் செல்லுமிடங்களி லெல்லாம் இந்த ஆவியை அடித்துக் கொண்டு போகிறது. மேலே வானத்தில் சென்றவுடன் இந்த ஆவி மேகம் ஆகிறது. குளிர்ந்த காற்று

மேகங்களில் பட்டவுடன் அது மழையாகப் பெய்கிறது.

மலைகளின் உச்சியிலும், மிகப் பெரிய காடுகளிலும் குளிர்ந்த காற்று மிகுதி. அதனால் அவ்விடங்களில் மிகுதியாக மழை பெய்யும். அப்படிப் பெய்வதனால் அந்தத் தண்ணீர் ஆறாக ஓடி வருகிறது. அந்த ஆற்று நீரை ஏரி, குளங்களில் நிரப்பிக்கொள்ளுகிறோம். வயல்களுக்குப் பாய்ச்சுகிறோம். இன்னும் வேண்டியபடி எல்லாம் பயன்படுத்துகிறோம்.

மழையில்லாவிட்டால் உலகில் ஒன்றுமே நடவாது. ஏரி, குளங்கள் வறண்டு விடும். பயிர் விளையாது. பஞ்சம் உண்டாகும். மக்களும் உணவில்லாமல் தவிப்பார்கள். ஆடு, மாடு, பறவைகளும் தவிக்கும். ஆதலால் மழையே எல்லா உயிர்களையும் வளர்க்கிறது.

சூரியனால்தான் மழை பெய்கிறது. அந்த மழையால்தான் விளைபொருள்கள் விளைகின்றன. அவை விளைவதற்கு வேண்டிய வெப்பத்தையும் சூரியனே தருகிறான். இப்படி உதவுகின்ற சூரியனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டுமல்லவா? அதனால் இந்துக்கள் தை மாதம் முதல் தேதி பொங்கலிட்டுச் சூரியனை வணங்குகிறார்கள்.

**மாரி யல்லது காரிய மில்லை. வானம் சுருங்கில் தானம் சுருங்கும்.**

| | | |
|---|---|---|
| உலை | வறண்டு | மாரி |
| வெப்பம் | நன்றி | வானம் |
| தானம் | சுருங்கும் | கொதிக்கிறது |
| ஆவி | மாற்றிவிடுகிறது | மேகம் |
| புகைபோல | இலேசானது | தவிப்பார்கள் |

## கேள்விகள்

1. நீர் ஆவியாகப் போவதை நீ எங்கெங்கே பார்த்திருக்கிருய்?

2. குளம் குட்டைகளில் உள்ள நீர் எப்படி ஆவியாக மாறுகிறது?

3. மேகம் எப்பொழுது மழையாகப் பெய்கிறது?

4. மழையில்லாமற் போனல் என்ன ஆகும்?

5. சூரியனுக்கு எதற்காக நாம் நன்றி செலுத்த வேண்டும்?

## இலக்கணம்

**ஒன்றையும் பலவற்றையும் குறிக்கும் பெயர்கள்.**

சில பெயர்கள் ஒரு பொருளேயும், சில பெயர்கள் பல பொருள்களேயும் காட்டும்.

(உ - ம்.) 1. பசு பால் தரும்.
2. குதிரைகள் வேகமாய் ஓடும்.
3. பறவை பறக்கும்.
4. பிள்ளேகள் படிக்கிருர்கள்.
5. பழம் தித்திக்கும்.
6. மாடுகள் உழுகின்றன.
7. அரசன் ஆளுகிருன்.
8. மரங்கள் வளர்கின்றன.

இந்த வாக்கியங்களில் உள்ள ஒன்றைக் குறிக்கும் பெயர்களேயும், பல பொருள்களேக் குறிக்கும் பெயர்களேயும் கீழ்வரும் கட்டத்தில் கொடுத்திருக்கும் மாதிரி எழுது.

| | ஒன்று | பல |
|---|---|---|
| 1. | பசு | பசுக்கள் |

## 6. நாய்

நாய் அறிவிற் சிறந்த ஒரு விலங்கு. மனிதர்கள் நாய்களைக் காவலுக்காக வளர்க்கிறார்கள். வீடுகளுக்கும், ஆட்டு மந்தைகளுக்கும், தோட்டங்களுக்கும், தோப்புத் துறைகளுக்கும் நாய் உண்மையுள்ள காவற்காரன்போல உழைக்கும்.

நாய்களுள் பலவகைகள் உண்டு. அவற்றுள் கோம்பை நாய் என்பது ஒன்று. கோம்பை நாய்க்கு முகமும், கால்களும் நீண்டிருக்கும். அது உயரமாய் இருக்கும். சடைநாய் என்பது ஒன்று. அது குட்டையாக இருக்கும். அதன் உடல் முழுவதும் மயிர் அடர்ந்திருக்கும். இவைகளைத்தவிர இன்னும் பலவகை நாய்களும் உண்டு.

நாய் ஊன் உண்ணும் விலங்கு. ஆனாலும் அது உரொட்டி, சோறு, பால் முதலியவற்றையும் உண்ணும். நாயை வளர்ப்பவர்கள் அதற்கு ஊன் கலந்த சோற்றையும் இடுவார்கள். நாய் தண்ணீரை நாக்கினால் நக்கிக் குடிக்கும். அதனால் 'ஆறு நிறையத் தண்ணீர் போனாலும், நாய் நக்கித்தான் குடிக்கும்' என்னும் பழமொழி வழங்குகிறது.

நாய் தூங்கும்பொழுது சிறிய அரவம் கேட்டாலும் விழித்துக் கொள்ளும். நாய்க்கு மோப்பம் பிடிக்கும் திறமை மிகுதி. அதனால் வேட்டைக்குச் செல்பவர்கள் வேட்டைக்குச் செல்லும் போது நாய்களைத் தம்முடன் அழைத்துச் செல்வார்கள். ஓநாய் முதலிய கொடிய விலங்குகள் வருவதை நாய் மோப்பத்தால் தெரிந்துகொள்ளும்.

முயல் முதலியவை மறைந்துள்ள இடங்களைக் கண்டுபிடிக்கும்.

நாய் வேகமாக ஓடும். ஓடும்பொழுது அதன் நாக்கில் வியர்க்கும். அதனால் அது ஓடிவந்தவுடன் நாக்கைத் தொங்கவிடும். நாக்கிலிருந்து வியர்வை சொட்டும். பூனையைப் போல் நாய்க்கும் இரவில் கண் நன்றாய்த் தெரியும்.

நாய் நன்றியுடைய விலங்கு. ஒரு வேளை சிறிது உணவு கொடுத்தவரையும் அது என்றும் மறக்காது. தன்னை வளர்ப்பவரிடம் அது அன்பாக இருக்கும். தன் எசமானனைத் தன் உயிரை விட அருமையாகப் பாராட்டும். எசமானனுக்குத் துன்பம் நேர்வதைக் கண்டால், நாய் தன் உயிரைக் கொடுத்தாவது அவனைக் காப்பாற்ற முயலும். தன்னை அவன் அடித்தாலும் அவனிடம் அன்பு குறையாமல் பழகும்.

நாய் இப்படிப்பட்ட அரிய பண்புகளை உடையது. அதனால்தான் மனிதர்கள் அதைத் தம் பிள்ளையைப் போல் அருமையாக வளர்க்கிறார்கள். போகும் இடங்களுக்கெல்லாம் அதை அழைத்துக் கொண்டு போகிறார்கள். காரிலும் நாயை மக்கள் ஏற்றிக்கொண்டு போவதை நீங்கள் பார்த்திருக்கலாம். விலங்குகளில் நாயே மிகவும் நன்றியுள்ள விலங்கு.

| விலங்கு | அரவம் | வியர்க்கும் |
|---|---|---|
| காவல் | மந்தை | ஊன் |
| மோப்பம் | பண்பு | தோப்புத்துறை |

### கேள்விகள்

1. கோம்பை நாய் எப்படி இருக்கும்?
2. சடைநாய் எப்படி இருக்கும்?
3. நாய் எவற்றை உண்ணும்?
4. நாயை எதற்காக வளர்க்கிறார்கள்?
5. நாயின் அரிய பண்புகள் யாவை?

## இலக்கணம்

### ஆண், பெண், பெயர்கள்

சில பெயர்கள் மக்களுள் ஆணையும், சில பெயர்கள் பெண்ணையும் குறிக்கும்.

(உ - ம்.) கந்தன் வந்தான்.
வள்ளி பாடினாள்.
அரசன் நாட்டை ஆள்கிறான்.
அரசி ஆடை கொடுத்தாள்.
பையன் பாடம் படிக்கிறான்.
பெண் பாட்டுப் பாடுகிறாள்.
அண்ணன் கடிதம் எழுதினான்.
தங்கை அதைப் படிக்கிறாள்.
அப்பா வேலைக்குப் போயிருக்கிறார்.
அம்மா சாதம் சமைக்கிறாள்.

மேலே உள்ள வாக்கியங்களில் வந்துள்ள ஆண், பெண் பெயர்களைக் கட்டத்தில் கொடுத்திருக்கிற மாதிரி எழுது.

| | ஆண் | பெண் |
|---|---|---|
| 1. | கந்தன் | வள்ளி |

## 7. தந்தையைத் திருத்திய மகன்

ஓர் ஊரில் கண்ணன் என்ற ஒருவன் இருந்தான். அவனுக்கு வயதான தகப்பனாரும் இருந்தார். கண்ணனுக்கு பத்து வயதுள்ள ஒரு மகனும் இருந்தான். அவன் பெயர் வேலன்.

கண்ணன் மிகவும் பொல்லாதவன். அவன் தன் தகப்பனாரை வீட்டுத் திண்ணையிலேயே இருக்கச் சொல்வான். அவருக்குச் சோறு வடித்த கஞ்சியைத்தான் ஒவ்வொரு நாளும் ஊற்றுவான். அதில் கொஞ்சம் சோறும் உப்பும் தான் இருக்கும். தொட்டுக் கொள்ள ஊறுகாய் கூடக் கொடுக்க மாட்டான். அந்தக் கஞ்சியை ஓர் ஓட்டில் தான் ஊற்றுவான். கஞ்சியைக் குடித்த பிறகு அந்தக் கிழவர் ஓட்டைத் தன்னிடமே வைத்திருக்க வேண்டும். இவ்வளவையும் பொறுத்துக் கொண்டிருந்தார் அக் கிழவர்.

ஒரு நாள் வேலன் தாத்தாவின் ஓட்டை எடுத்து ஒளித்து வைத்து விட்டான். கிழவருக்குக் கஞ்சி ஊற்றும் வேளை வந்தது. கண்ணன் கஞ்சியை எடுத்து வந்தான். "ஓட்டை எடுத்து வை; கஞ்சி ஊற்றுகிறேன்" என்றான்.

கிழவர் ஓட்டை எடுக்கப் போனார். ஓடு வைத்திருந்த இடத்தில் அது காணவில்லை. "ஓட்டைக் காணோமே. நான் என்ன செய்வேன்" என்று வருத்தப்பட்டார் கிழவர்.

கண்ணன், "ஓட்டைத் தொலைத்து விட்டாயா? மறுபடியும் ஓடு வாங்கக் காலணா வேண்டுமே. உனக்குக் கஞ்சி ஊற்றுவது போதாதா?

மறுபடியும் ஓட்டுக்குத் காலணு செலவழிக்க வேண்டுமா? ஓட்டைத் தேடிக் கொண்டுவா. இல்லையானல் கஞ்சி ஊற்றமாட்டேன்'' என்று சொல்லி அடிக்கப் போனன்.

வேலன், "அப்பா! அப்பா! தாத்தாவை அடிக்காதே; நான்தான் அந்த ஓட்டை எடுத்தேன்; என் பெட்டியில் வைத்துப் பூட்டியிருக்கிறேன்'' என்றன்.

கண்ணன், நீ ஏன் அந்த ஓட்டை எடுத்து வைத்தாய்? கொண்டுவா அதை! உன் பாட்டனுக்குக் கஞ்சி ஊற்ற வேண்டும்'' என்றன்.

வேலன், "நான் அதைக் கொடுக்க மாட்டேன், அப்பா. நீங்கள் நாளைக்குக் கிழவர் ஆகிவிடுவீர்களே. அப்பொழுது உங்களுக்குக் கஞ்சியை எதில் ஊற்றுவது? அதற்காகத்தான் இப்பொழுதே ஓட்டை எடுத்தேன்; கெட்டுப் போகாதபடி பெட்டியில் வைத்திருக்கிறேன்'' என்றன்.

கண்ணன் சற்று நேரம் திகைத்தான். 'இது வரை நாம் செய்தது தவறு. நம் தகப்பனரை நாம் நன்ருகக் காப்பாற்ற வேண்டும். நம் பிள்ளை அதைப் பார்த்து, பிற்காலத்தில் நம்மையும் நன்ருகக் காப்பாற்றுவான்' என்று எண்ணினன். அன்று முதல் கண்ணன் தன் தகப்பனரை அன்புடன் காப்பாற்றினன்.

| | | |
|---|---|---|
| வயதான | ஊற்றுவான் | ஊறுகாய் |
| பொல்லாதவன் | தொட்டுக்கொள்ள | தேடிக்கொண்டு |
| கஞ்சி | தொலேத்து | பூட்டி |
| பிற்காலத்தில் | கெட்டுப்போகாதபடி | |

## கேள்விகள்

1. கண்ணன் எப்படிப்பட்டவன் ?
2. அவன் தன் தகப்பனுருக்கு எதை உணவாகக் கொடுத்தான் ?
3. ஒரு நாள் வேலன் என்ன செய்தான் ?
4. வேலன் கண்ணனிடம் என்ன கூறினுன் ?
5. கடைசியில் கண்ணன் என்ன எண்ணினுன் ?

## பயிற்சி

கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களேச் சேர்த்துப்படி.

தவறு, வயதானவர், காப்பாற்ற, பத்திரமாக, ஒளித்து, கஞ்சி, ஊற்றி, அன்புடன், காப்பாற்றினுன்—

1. கண்ணன் செய்தது ——.
2. கண்ணன் தகப்பனுர் ——.
3. கண்ணன் அவருக்குக் —— தான்—— வந்தான்.
4. வேலன் அந்த ஓட்டை —— வைத்து விட்டான்.
5. ஓட்டை நான் —— வைத்திருக்கிறேன்.
6. அதுமுதல் கண்ணன் தன் தகப்பனுரை —— ——.

# 8. காய்கறித் தோட்டம்

நமது உணவுக்கு அரிசியே சிறந்தது என்று நாம் எண்ணுகிறோம். ஆனாலும் அரிசியுடன் பல பொருள்கள் வேண்டியிருக்கின்றன. அவற்றில் காய் கறி, கீரை வகைகளும் சிறந்தவை.

காய் கறிகள் பெரும்பாலும் புன்செய் நிலங்களில் விளையும். அந்தப் புன்செய் நிலங்களைத் தோட்டங்கள் என்று சொல்வார்கள். அந்தத் தோட்டப் பயிர்களில் சிலவற்றைப் பயிரிடும் விதத்தைப் பார்ப்போம்.

பயிர் செய்வதற்கு முன் நிலத்தை நன்முக உழ வேண்டும்; அல்லது கொத்த வேண்டும். மண் கட்டிகளை உடைத்துப் புழுதியாக்க வேண்டும். கற்களைப் பொறுக்கி எறிய வேண்டும். பிறகு எருப்போட வேண்டும். பயிர்களுக்குத் தக்கபடி பாத்திகளாகவோ அல்லது சிறு சிறு கால்களாகவோ பிரிக்க வேண்டும்.

கீரை வகைகளைப் பயிரிட, அவற்றின் விதைகளைப் பாத்திகளில் தெளிக்க வேண்டும். வெண்டை, கொத்தவரை விதைகளைக் கால்களின் ஓரங்களில் நடலாம். கத்தரி, மிளகாய் முதலிய பயிர்களுக்கு முதலில் நாற்றுப்போட வேண்டும். பிறகு அந்த நாற்றுக்களைக் கால்களின் ஓரங்களில் நடவேண்டும். அவரை, புடலை ஆகிய இவை குழிப் பயிர்கள். ஆதலால், குழிகள் தோண்டி அவற்றில் விதைகளை நடவேண்டும். முளைத்த பிறகு அவை வளர்வதற்குக் கொழுகொம்பு நடவேண்டும்.

பூசணி, பறங்கி முதலியவைகளும் குழிப் பயிர்களே. ஆனல் அவை படருவதற்குப் பந்தலிட

வேண்டாம். அவை நிலத்திலேயே ஓடிப் படரும். பீர்க்கு, பாகல் முதலிய சில குழிப் பயிர்களை வேலியிலும் மரங்களிலும் படர விடுவதும் உண்டு.

வாழை நன்செயிலும் பயிராகும்; புன்செயிலும் பயிராகும். வாழையைக் குழிகள் தோண்டி அவற்றில் கன்றுகளை நட்டுப் பயிர்செய்ய வேண்டும். வாழைக்குத் தண்ணீர் மிகுதியாக வேண்டும்.

பயிர்களை அவற்றின் காலமறிந்து பயிர் செய்ய வேண்டும். களைகளை அவ்வப்பொழுது எடுத்துவிட வேண்டும். காலம் தவருமல் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். நிலத்தைக் கொத்த வேண்டிய காலத்தில் கொத்தவேண்டும். இவ்வேலைகளைச் சோம்பலில்லாமல் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் முழுப் பயன் கிடைக்கும்.

கடைகளில் கிடைக்கும் காய்கறிகளில் பல வெளியூர்களிலிருந்து வருகின்றன. வரும்பொழுது அவை மூட்டைகளில் கட்டப்படுகின்றன. அவை வாடி வதங்கி இருக்கும். விலையும் மிகுதியாக இருக்கும். ஆதலால் நாமே அவற்றைப் பயிர் செய்வது நல்லது. அன்றன்றைக்குப் புதிய புதிய காய்களைப் பறிக்கலாம். சமைத்துச் சாப்பிடலாம். அவை உடம்பிற்குத் தெம்பைத் தரும். பயிர் செய்வதால் உடலிற்கும் வலிமை உண்டாகிறது; சோம்பலும் நீங்குகிறது.

**சில பழமொழிகள்**

“ பருவத்தே பயிர் செய் ”

“ அகல உழுவதிலும் ஆழ உழுவதே நல்லது ”

| | | |
|---|---|---|
| களை | பாத்தி | கொழுகொம்பு |
| தெம்பு | புன்செய் | அகல ஆழ |
| பொருள் | பருவம் | படருவது |
| புழுதி | நாற்று | |

### கேள்விகள்

1. அரிசியுடன் எவற்றைச் சேர்த்துச் சாப்பிட வேண்டும்?
2. தோட்டங்கள் என்றால் என்ன?
3. பயிர் செய்வதற்கு முன் என்ன செய்ய வேண்டும்?
4. குழிப் பயிர்கள் எவை?
5. எந்தக் குழிப் பயிர்களுக்குப் பந்தல் வேண்டாம்?
6. பயிர்களுக்கு மிகச் சிறந்தவை எவை?
7. நாமே பயிர் செய்வதால் உண்டாகும் நன்மைகள் யாவை?

## இலக்கணம்

### வினைச்சொல்

கந்தன் வந்தான்.

வள்ளி படிக்கிறாள்.

பிள்ளைகள் எழுதுகிறார்கள்.

மரம் பூக்கும்.

பறவைகள் பறக்கின்றன.

மேற்சொன்ன வாக்கியங்களில் உள்ள 'வந்தான்; படிக்கிறான்; எழுதுகிறார்கள்; பூக்கும்; பறக்கின்றன' என்ற சொற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலையைக் குறிக்கின்றன. இப்படி வேலையைக் குறிக்கும் சொற்களை 'வினைச்சொற்கள்' என்று சொல்லுவார்கள்.

## 9. மலர்கள்

பூமகளின் புன்னகைபோல்
பூத்திடு வோமே !—கம்பன்
பாமணக்குந் தமிழினைப்போல்
பரிமளிப் போமே !

வண்ணவண்ணச் சேலைகட்டி
மகிழ்ந்திருப் போமே !—இந்த
மண்ணகமும் விண்ணகமாய்
மாறச் செய்வோமே !

மங்கையர்க்கும் ஆடவர்க்கும்
மணமுடிப் போமே !—மன்னர்
தங்கமுடி மீதும் நாங்கள்
தங்கி வாழ்வோமே !

கரும்பினிலும் இனியரசம்
கருதி வைப்போமே !—அதை
விரும்பிவரும் நண்பர்க்கு
விருந்தளிப் போமே !

ஈசனருள் வேண்டிநிதம்
இணையடி போற்றி !—நல்ல
வாசமெழு தூபதீபம்
வழங்கி நிற்போமே !

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை.



## 10. நொண்டி விளையாட்டு

**கண்ணன்** :—முருகா, விளையாட வா.

**முருகன்** :—என்ன விளையாட்டு விளையாடுவது?

**கண்ணன்** :—எனக்கு நொண்டி விளையாட்டில் தான் விருப்பம் அதிகம். அதனால் அந்த விளையாட்டே விளையாடலாம் வா.

**முருகன்** :—எனக்கு நொண்டி விளையாட்டுத் தெரியாது.

**கண்ணன்** :—மிகச் சுலபமான விளையாட்டு அது. நாலு பக்கத்திலும் கோடு போட்டு ஒரு பெரிய கட்டம் அமைத்துக்கொள்ள வேண்டும். அந்தக் கட்டத்திற்குள் விளையாடும் பிள்ளைகளெல்லாம் இருக்கவேண்டும். ஒருவன் நொண்டி

யடித்துக் கொண்டு அவர்களைத் துரத்தவேண்டும். அவர்கள் இவன் கையில் அகப்படாமல் கட்டத்திற் குள்ளேயே ஓடவேண்டும். எவனாவது ஒருவனை இவன் தொட்டுவிட வேண்டும். தொடப்பட்டவன் பிறகு நொண்டியடித்துக் கொண்டு வரவேண்டும்.

**முருகன்** :—அப்படியானால் நாம் அதை விளை யாடுவோம். அதோ, கோபாலன், கந்தன், வேலன், முருகன் எல்லோரும் வருகிறார்கள். நிலாவும் நன்றாக இருக்கிறது. எல்லோருமாக விளை யாடுவோம்.

**கண்ணன்** :—உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். நல்ல வேளையில் நீங்கள் வந்தீர்கள். எல்லோருமாகச் சேர்ந்து நொண்டி விளையாட்டு விளையாடலாம்.

**பிள்ளைகளில் ஒருவன்** :—இரண்டு பிரிவு களாகப் பிரிந்து விளையாடுவோமா?

**கண்ணன்** :—கந்தா, பிரிவில்லாமலே விளை யாடலாமே?

**கந்தன்** :—சரி. யார் முதலில் நொண்டி யடிப்பது?

**வேலன்** :—கந்தா, நான்தான் முதலில் நொண்டியடிக்கிறேனே.

**கந்தன்** :—இல்லை. நான் தான்.

**முருகன்** :—நீங்களிருவரும் வேண்டாம். நானும் வேண்டாம். கண்ணன் முதலில் பிடிக் கட்டும். அவனுக்கு இந்த விளையாட்டும் நன்றாகத் தெரியும்.

**கந்தன்** :—சரி. கண்ணனே பிடிக்கட்டும்.

**கண்ணன்** :—வேலனைத் தொட்டு விட்டான்.

வேலன் தான் இப்பொழுது நொண்டியடிக்க வேண்டும்.

**கோபாலன் :**—வேலன் கால் இரண்டையும் ஊன்றி விட்டான். அவன் தோற்று விட்டான். அவன் கட்டத்தை விட்டு வெளியே போய்விட வேண்டும்.

**முருகன் :**—இந்த ஆட்டம் நன்ருக இருக்கிறது. நிலா வீசும் பொழுதெல்லாம் நாம் விளையாடுவோம்.

**கண்ணன் :**—சரி. நேரமாகிவிட்டது. வீட்டுக்குப் போகலாம் வாருங்கள்.

| | | |
|---|---|---|
| சுலபம் | அகப்படாமல் | எதிர்பார்த்து |
| துரத்த | தொடப்பட்ட | நல்லவேளை |
| பிரிவு | ஊன்றி | எல்லோருமாக |

**கேள்விகள்**

1. நொண்டி விளையாட்டிற்கு முதலில் என்ன செய்ய வேண்டும்?
2. நொண்டி விளையாட்டில் இரண்டு வகைகள் யாவை ?
3. வேலன் ஏன் தோற்றுப் போனுன் ?

**பயிற்சி**

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களைச் சேர்த்து எழுது.

1. சுந்தரம் நன்ருக ——— அடிப்பான்.
2. எனக்கு நொண்டி ——— தெரியாது.
3. நொண்டி விளையாட்டு ஒரு நல்ல ———.
4. வேலன் கால் இரண்டையும் ——— ———.



# 11. மாட்டு வண்டியும் மோட்டார் வண்டியும்

**மாட்டு வண்டி** :—தம்பி மோட்டார் வண்டி! என்ன என் பக்கத்தில் வந்து 'பும்பூம்' என்று ஊதி என்னைப் பயமுறுத்துகிறாய்? நேற்று வந்த சிறுவன் அல்லவா நீ! உனக்கு இவ்வளவு செருக்கா? இந்தக் காலத்தில் சிறியவர் பெரியவர் என்ற மரியாதை ஏது?

**மோட்டார் வண்டி** :—மாட்டு வண்டி அண்ணா, உங்களுக்கு வணக்கம். பெரியவராகிய நீங்கள் சினம் கொள்ளலாமா? சிறியவனாகிய நான் என்ன செய்து விட்டேன்?

**மாட்டு வண்டி** :—என் மேல் மோதுவது போல வருகிறாய். புழுதியை வாரிக் கண்ணிலே தூவுகிறாய். மழைக் காலத்தில் நீ போகும் பொழுது சேற்றை வாரி வீசுகிறாய். உன்னுடைய உருவமும் குரலும் குழந்தைகளைப் பயப்படுத்துகின்றன. இரவில் உன்னுடைய விளக்கின் வெளிச்சமோ எதிரில் வருபவர் கண்ணைப் பறித்துக்கொண்டு போகிறது. சில வேளைகளில் தெருவில் நடப்பவர் மீது ஏறி, அவர்களுடைய உயிரை வாங்கி விடுகிறாய். இவைகளை விட நீ இன்னும் என்ன செய்ய வேண்டும்?

**மோட்டார் வண்டி** :—அண்ணு, இப்படி நீங்கள் சொல்லக் கூடாது. நான் மக்களை ஏற்றிக் கொண்டு எவ்வளவு விரைவாகப் போகிறேன்! ஒரு மணி நேரத்தில் நான் முப்பது மைல் ஓடுவேன். முப்பது மைல் செல்ல உங்களுக்கு ஒரு நாள் ஆகுமே. மழையையும், வெயிலையும் நான் பொருட் படுத்த மாட்டேனே. நீங்கள் அவ்வாறு இருப்பீர் களா? நான் மனிதர்களை ஆட்டி அசைக்காமல் உட்காரவைத்துக்கொண்டு போவேனே. உங்க ளால் ஆகுமா?

**மாட்டு வண்டி** :—தம்பீ, என்னென்னவோ மேலே மேலே பேசுகிருயே. நான் மணல், சேறு, தண்ணீரில் எல்லாம் போவேனே. உன்னுல் முடியுமா? நான் இல்லாத ஊரே இல்லை. நீ நுழைய முடியாத ஊர்கள் பல உண்டு. என்னை நடுத்தர மக்கள்கூட வாங்கி வைத்துக் கொள்ள லாமே. உன்னைப் பணக்காரர்கள் தானே வாங்கி வைத்துக் கொள்ள முடியும். ஏழைகளுக்கு என்னைப் போல உன்னுல் உதவி செய்ய முடியுமா? பாரத நாடு ஏழைகள் மிகுந்த நாடு. ஏழைகளுக்கு உதவி செய்யும் நான்தான் இந்த நாட்டிற்குத் தகுதியானவன்.

**மோட்டார் வண்டி** :—அண்ணு, நமக்குள் ஏன் வீண் சண்டை? இக்காலத்தில் நாம் இருவருமே இந்த நாட்டிற்கு வேண்டியவர்கள். நம்மால் முடிந்தவரை நாட்டிற்குத் தொண்டு செய்வோம்.

| | | |
|---|---|---|
| பயமுறுத்துகிருய் | செருக்கு | வாரி |
| பறித்துக்கொண்டு | விரைவாக | சினம் |
| நடுத்தர மக்கள் | வேண்டியவன் | தொண்டு |

### கேள்விகள்

1. மோட்டாரை யார் வாங்க முடியும்?
2. எந்த வண்டி எல்லா ஊர்களிலும் இருக்கும்?
3. மாட்டு வண்டி தன்னைப் பற்றி என்னென்ன சொல்லிற்று?
4. கடைசியாக மோட்டார் என்ன சொல்லிற்று?

## இலக்கணம்

### காலங்கள்

கோபாலன் படித்தான். கோபாலன் படிக்கிறான். கோபாலன் படிப்பான்.

படித்தான் என்பதில் படித்தல் வேலை முன்னமே முடிந்து விட்டது. இதை **இறந்த காலம்** என்று சொல்வார்கள்.

படிக்கிறான் என்பதில் படித்தல் வேலை இப்போது நிகழ்கிறது. இதை **நிகழ் காலம்** என்று சொல்வார்கள்.

படிப்பான் என்பதில் படித்தல் வேலை இனிமேல் நடக்கும். இதை **எதிர் காலம்** என்று சொல்வார்கள்.

வினைச்சொற்களுக்கு இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என மூன்று காலங்கள் உண்டு.

பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களின் காலங்களைக் கட்டத்தில் எழுது.

1. அம்பலவாணன் ஆடினான்.
2. தேசிகன் பாடுகிறான்.
3. அப்துல்லா தொழுவான்.
4. பூ பூத்தது.
4. கன்று துள்ளுகிறது.
6. இரயில் வந்தது.

| இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர் காலம் |
|---|---|---|
| | | |

# 12. ஆசிரியரின் அன்பு

நம் நாட்டில் சிறந்த அறிவாளிகள் பலர் இருந்தனர். அவர்களுள் **அரங்கநாத முதலியார்** ஒருவர். அவர் சென்னையில் வாழ்ந்து வந்தார். அரசாங்கக் கல்லூரியில் பி. ஏ. வகுப்புக்குக் கணக்குப் பேராசிரியராக இருந்தார். ஓர் ஆண்டில் அந்த வகுப்பில் **கோபாலன்** என்னும் ஒரு மாணவனும் படித்து வந்தான். அவன் மிகவும் நல்லவன். மிகுந்த அறிவுடையவன். அதனால் எல்லா ஆசிரியர்களும் அவனிடம் அன்பு கொண்டனர்.

கல்லூரியில் அரை ஆண்டுத் தேர்வு நடந்தது. விடுமுற்ற விட்டார்கள். மாணவர்கள் எல்லோரும் விடுமுறைக்கு ஊருக்குப் போனார்கள். மறுபடியும் கல்லூரி திறந்தார்கள். எல்லா மாணவர்களும் திரும்பி வந்தார்கள். ஆனால் கோபாலன் மட்டும் வரவில்லை. அரங்கநாத முதலியார் கோபாலன் வராததைத் தெரிந்து கொண்டார். இரண்டு மூன்று நாட்கள் சென்று வருவான் என்று எண்ணினார். ஆனால் அப்பொழுதும் அவன் வரவில்லை. அதனால் அவர் கோபாலனுடைய வீட்டுக்குப் போனார். வீட்டு வாசலில் நின்று 'கோபாலா! கோபாலா! என்று கூப்பிட்டார். உள்ளே இருந்த கோபாலன் வெளியில் வந்தான். ஆசிரியரை வணங்கினான். உள்ளே அழைத்துக் கொண்டு போனான்; ஒரு மணையில் உட்கார வைத்தான்.

கோபாலன் முகம் தெளிவாக இல்லை. ஏதோ கவலையோடு இருப்பதாக அவருக்குத் தெரிந்தது.

‘என்னப்பா உனக்குக் கவலை? நீ ஏன் கல்லூரிக்கு வரவில்லை?’ என்று கேட்டார்.

கோபாலன் ‘என் தகப்பனுர் இறந்துவிட்டார். எனக்குத் தாயாருமில்லை. நாங்கள் மிகவும் ஏழைகள். என்னுல் இனிமேல் கல்லூரிக்குச் சம்பளம் கட்ட முடியாது. அதனுல் படிப்பை நிறுத்திவிட்டேன். நான் பொருள் தேடித்தான் என் தாத்தாவையும் பாட்டியையும் காப்பாற்ற வேண்டும். அதனுல் ஏதேனும் வேலைக்குப் போகலாம் என்று இருக்கின்றேன்’ என்று அழுதுகொண்டே சொன்னுன்.

அப்பொழுது அவன் தாத்தாவும் பாட்டியும் அங்கு வந்தார்கள். அவர்களும் அழுதார்கள். முதலியார் மனம் இரங்கினுர். அவர்களுக்கு ஆறுதல் கூறினுர். “இன்னும் நான்கு மாதங்கள் படித்தால் போதும். கோபாலன் பி. ஏ. தேறிவிடுவான். பிறகு அவனுக்கு நானே ஒரு வேலை வாங்கித் தருகிறேன். அது வரையில் உங்கள் வீட்டுச் செலவுக்கும் மாதம் இருபது ரூபாய் தருகிறேன். கோபாலனுக்குச் சம்பளமும் நானே கட்டிவிடுகிறேன்” என்றுர்.

இதைக் கேட்ட தாத்தாவும் பாட்டியும் “நீங்கள்தான் எங்களுக்குக் கடவுள்” என்று சொன்னுர்கள்.

முதலியார் ‘சரி, கவலைப்படாதீர்கள். நாளை முதல் பையனைக் கல்லூரிக்கு அனுப்புங்கள்’ என்று சொன்னுர். கோபாலன் கல்லூரிக்குச் சென்று வந்தான். முதலியார் தாம் சொன்ன படியே உதவி செய்தார். கோபாலன் பி. ஏ. தேர்வில் தேறினுன். அவனுக்கு முதலியார் ஒரு

வேலையும் வாங்கிக் கொடுத்தார். ஆசிரியரின் அன்பினால் கோபாலன் மேன்மேலும் உயர்வு பெற்று வாழ்ந்து வந்தான்.

| | | |
|---|---|---|
| அறிவாளிகள் | மனை | கல்லூரி |
| தெளிவு | விடுமுறை | தேர்வு |
| பேராசிரியர் | மேன்மேலும் | ஆறுதல் |
| அரை ஆண்டு | தேறினான் | உயர்வு |

## கேள்விகள்

1. அரங்கநாத முதலியார் எங்கே வேலை பார்த்தார்?
2. கோபாலனிடம் ஆசிரியர்கள் மிக்க அன்பு கொண்டனர். ஏன்?
3. கோபாலன் படிப்பை நிறுத்தியதற்கு என்ன காரணம் சொன்னான்?
4. முதலியார் கோபாலனைப் பார்த்து என்ன கேட்டார்?
5. முதலியார் கோபாலனுக்குச் செய்த உதவி யாது?

## பயிற்சி

பொருத்தமாகச் சேர்த்துப்படி :

| | |
|---|---|
| 1. அரங்கநாத முதலியார் | வேலை வாங்கித் தந்தார். |
| 2. அவர் அவனுக்குப் | தேர்வில் தேறினான். |
| 3. கோபாலன் பி. ஏ. | பாராட்டி வாழ்ந்தான். |
| 4. அவர் அவனுக்கு | பொருள் உதவி செய்தார். |
| 5. கோபாலன் முதலியாரைப் | கோபாலனை விரும்பினர். |



## 13. கிளி

பறவைகளுள் பேசும் பறவை, பாடும் பறவை, ஆடும் பறவை எனப் பலவகையுண்டு. கிளி, மைனு இவைகள் பேசும் பறவைகள். மயில், வான் கோழி இவைகள் ஆடும் பறவைகள். குயில், வானம்பாடி இவை பாடும் பறவைகள். இவை களுள் கிளியைப்பற்றிப் பார்ப்போம்.

கிளிகளுள் பலவகைகள் உண்டு. ஆயினும் பச்சைக் கிளிகள்தான் எங்கும் மிகுதியாகக் காணப்படும். பச்சைக் கிளியின் உடல் பச்சை நிறம். அலகு சிவப்பு நிறம். அதன் கழுத்தைச் சுற்றிச் சிவப்பு நிறமான ஒரு கோடு இருக்கும். சில கிளிகள் வெண்மை நிறமாக இருக்கும். மற்றும் சில மஞ்சள் நிறமானவை. ஐந்து வகை நிறங் களை உடைய கிளிகளும் உண்டு. அவைகளைப் பஞ்சவர்ணக் கிளிகள் என்று சொல்வார்கள்.

ஐந்து நிறங்களாவன பச்சை, சிவப்பு, மஞ்சள், வெள்ளை, நீலம் என்பன.

கிளி பெரும்பாலும் மரங்களில் வசிக்கும். வீடுகளிலும் கோயில்களில் உள்ள சந்து பொந்துகளிலும் இவை வசிக்கும். மரத்தின் இலைகளும், கிளியின் நிறமும் ஒன்றாக இருக்கும். அதனால் இலைகளுக்கு நடுவில் இருக்கும் பச்சைக் கிளி நன்றாகத் தெரியாது.

கிளி பார்ப்பதற்கு அழகாக இருக்கிறது. இனிமையாகப் பேசுகின்றது. அதனால் சில மனிதர்கள் கிளியைப் பிடிக்கிறார்கள்; கூண்டில் அடைத்து வளர்க்கிறார்கள்; சில சொற்களைப் பேசக் கற்றுக் கொடுக்கிறார்கள். அச் சொற்களை அது திருப்பிச் சொல்லும். கிளியின் பேச்சு கேட்பதற்கு இனிமையாக இருக்கும். ஆகையால் கிளி பேசுவதை மக்கள் விருப்பமுடன் கேட்கிறார்கள். ஆயினும், நாம் சொல்லிக் கொடுத்த சொல்லைத் தான் கிளி சொல்லும். வேறு சொல்லைச் சொல்லத் தெரியாது. இதனால் 'சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை' என்னும் பழமொழியும் வழங்குகிறது.

கிளி பழங்களை உண்ணும். மிளகாய்ப்பழத்தில் அதற்கு மிக்க அவா. அது பாலையும் குடிக்கும். அதன் அலகு மிக உறுதியானது. அதனால் அது சில கொட்டைகளையும் உடைத்துத் தின்னும்.

மதுரை, திருவரங்கம் கோயில்களில் கிளிகளை வளர்க்கிறார்கள். நீங்கள் அவ்விடங்களுக்குச் சென்றால் அவைகளைப் பார்க்கலாம்.

மனிதன் சுதந்திரமாகவே வாழ விரும்புகிறான். அவனைச் சிறையில் அடைத்தால் அவன் எவ்வளவு

துன்பப்படுவான்? அதைப் போலவே, பறவைகளும் பறந்து திரிந்து, சுதந்திரமாகவே வாழ விரும்பும். அவைகளைக் கூண்டில் அடைத்தால் அவைகளுக்கும் துன்பமாகத்தான் இருக்கும். ஆகையால் எந்தப் பறவையையும் கூண்டில் அடைப்பது நல்லதன்று என்று சொல்லுகிறார்கள்.

| | |
|---|---|
| பஞ்சவர்ணம் | பொந்து |
| அலகு | கிளிப்பிள்ளை |
| சுதந்திரம் | சொன்னதைச்சொல்லும் |

## கேள்விகள்

1. பறவைகளுள் என்னென்ன வகை உண்டு?
2. என்னென்ன நிறக் கிளிகள் உனக்குத் தெரியும்?
3. கிளிகள் எங்கெங்கே வசிக்கும்?
4. கிளிகளை ஏன் பிடித்து வளர்க்கிறார்கள்?
5. கிளியின் உணவு என்ன?

## பயிற்சி

முடித்துக் கூறு:

1. கிளி பார்ப்பதற்கு —— —— .
2. நாம் சொல்வதை அது திருப்பிச் —— .
3. கிளிகளுள் பல வகைகள் ——.
4. கிளி பழங்களை ——.
5. சிலர் கிளிகளைப் ——
6. சில கோயில்களில் கிளிகளை ——.



## 14. மதுரை

மதுரை ஒரு பெரிய நகரம். இந்த நகரம் தமிழ் நாட்டின் தென் பகுதியில் அமைந்திருக்கிறது. இந்நகரம் சரித்திரத்தில் மிகவும் பெயர் பெற்றது. முன் காலத்தில் இந்நகரம் பாண்டி நாட்டின் தலை நகரமாக இருந்தது. பாண்டிய அரசர்கள் இங்கு இருந்து அரசு செலுத்தினார்கள். இப்பொழுது இது மதுரை மாவட்டத்திற்குத் தலைநகரமாக இருக்கிறது.

மதுரை நகரம் மிக அழகாக அமைந்திருக் கிறது. நகரத்தின் நடுவில் ஒரு பெரிய கோயில் இருக்கிறது. இது நம் நாட்டிலுள்ள சிறந்த கோயில்களுள் ஒன்று. இக்கோயிலைப் பார்க்க நாள் தோறும் வெளியூர் மக்கள் பலர் வருகிறார்கள். இக்

கோயிலில் பல திருவிழாக்கள் நடக்கும். கோயிலைச் சுற்றி நாற்புறமும் அகன்ற பெரிய வீதிகள் இருக்கின்றன. அவ்வீதிகளிலுள்ள மாடமாளிகைகளும், கடைகளும் பார்வைக்கு இனிய காட்சி அளிக்கும்.

மதுரையில் **திருமலை நாயக்கர் மகால்** என்ற ஒரு அரண்மனை இருக்கிறது. அது முழுவதும் செங்கல்லாலேயே கட்டப்பட்டது. அதில் மரமே கிடையாது. அதில் உள்ள செங்கல் தூண்கள் மிகப் பெரியவை. அவ்வளவு பெரிய தூண்கள் நம் நாட்டில் வேறு எங்கும் இல்லை. அத்தூண்களைப் பார்த்தால் நீங்கள் வியப்படைவீர்கள். அந்த மகால் திருமலை நாயக்கர் என்ற அரசரால் கட்டப்பட்டது. அதனால் அதற்கு அப்பெயர் வந்தது.

மதுரையில் நூல் நூற்கும் ஆலைகள் பல இருக்கின்றன. அவற்றில் ஆயிரக்கணக்கான மக்கள் வேலை செய்கிறார்கள். அதனால் அங்கு தொழிலாளர்கள் அதிகம். மக்கள் நெருக்கமும் அதிகம்.

அங்குப் பல உயர்நிலைப்பள்ளிகள் இருக்கின்றன. பல கல்லூரிகளும் இருக்கின்றன. மதுரை தமிழ் வளர்ச்சிக்குச் சிறந்த இடம். அக்காலத்தில் பாண்டியர்கள் மதுரையில் தமிழ்ச் சங்கம் நடத்திவந்தார்கள். அவர்கள் தமிழ் மொழியை வளர்த்து வந்தார்கள். புலவர்கள் பலர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்தார்கள். அவர்கள் தமிழ் மொழிகளில் சிறந்த பல நூல்களை எழுதியிருக்கிறார்கள். இக்காலத்திலும் மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் இருக்கிறது. அங்கு ஒரு தமிழ்க் கல்லூரி நடைபெறுகிறது.

மதுரையில் ஓடும் ஆற்றிற்கு **வைகை** என்று

பெயர். இதிலிருந்துதான் மதுரையிலுள்ள மக்க ளுக்குக் குழாய்த் தண்ணீர் கிடைக்கிறது. வைகை ஆற்றுநீர் நூலுக்குச் சாயம் போடத் தகுந்தது என்கிருர்கள்.

மதுரை நெசவுத் தொழிலுக்குப் பெயர் பெற்றது. மதுரையில் ஒரு பெரிய குளம் இருக் கிறது. அதற்கு **மாரியம்மன்** **தெப்பக்குளம்** அல்லது **வண்டியூர்த்** தெப்பக்குளம் என்று பெயர்.

மதுரை பார்க்கத் தகுந்த ஒரு நகரம். வெளி நாட்டினர்களும் இந்நகரத்தைப் பார்க்க வருகிருர் கள். இங்குள்ள கோயில், திருமலை நாயக்கர் மகால், தெப்பக்குளம் முதலியவற்றைப் புகைப் படம் எடுத்துக் கொண்டும் போகிருர்கள்.

நாட்டிற்கு அழகு நல்ல நகரம்.

| | | |
|---|---|---|
| சரித்திரம் | தலைநகரம் | முன்காலம் |
| பெயர்பெற்றது | நாற்புறமும் | இக்காலம் |
| ஆலைகள் | மகால் | மாடமாளிகை |
| தமிழ்ச் சங்கம் | வெளிநாட்டினர் | புகைப்படம் |

**கேள்விகள்**

1. மதுரை எந்த நாட்டிற்குத் தலைநகரமாக இருந்தது?
2. இப்பொழுது மதுரை எதற்குத் தலைநகரம்!
3. மதுரை நகரம் எவ்வாறு அமைந்திருக்கிறது?
4. மதுரையிலுள்ள மகாலின் பெயர் என்ன?
5. மதுரை எந்தத் தொழிலுக்குப் பெயர் பெற்றது?

## 15. அழகு

நாட்டுக்கு அழகு வளமை.
நாவிற்கு அழகு இன்சொல்.
வீட்டுக்கு அழகு வெளிச்சம்.
வீதிக்கு அழகு ஒழுங்கு.

காற்றுக்கு அழகு மென்மை.
கடலுக்கு அழகு அலைகள்.
ஆற்றுக்கு அழகு ஓட்டம்.
ஆணுக்கு அழகு வீரம்.

பெண்ணுக்கு அழகு கற்பு.
பேச்சுக்கு அழகு உறுதி.
கண்ணுக்கு அழகு கருணை.
கல்விக்கு அழகு அடக்கம்.

ஜலத்திற்கு அழகு சுத்தம்.
சங்குக்கு அழகு வெண்மை.
நிலத்திற்கு அழகு விளைவு.
நெற்றிக்கு அழகு திலகம்.

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா.

# 16. கடிதம் ஊர் ஊராய்ச் செல்லுதல்

நான் முன் காலத்தில் குதிரையின்மேல் சவாரி செய்து ஊர் ஊராய்ச் சென்றேன். பிறகு ஆட்களும் என்னைத் தூக்கிச் சென்றார்கள். அதன் பிறகு மாட்டு வண்டி, குதிரை வண்டிகளிலும் போனேன். அந்த வண்டிகளுக்குத் தபால் வண்டிகள் என்று பெயர். இப்பொழுது விரைவாய்ச் செல்லும் காலம். ஆகையால் நான் விரைந்து போகிறேன். நான் எப்படிப் போகிறேன் என்பதைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

நீங்கள் உங்கள் செய்தியை முதலில் எழுதுகிறீர்கள். பிறகு நான் போக வேண்டிய இடத்தை





என்மேல் எழுதுகிறீர்கள். தபால் பெட்டிகளில் என்னைப் போட்டு விடுகிறீர்கள்.

தபாலாபீசில் உள்ளவர்கள் பெட்டியைத் திறந்து என்னை எடுப்பார்கள். என்மேல் உள்ள இலேபிலில் அந்தந்தத் தபாலாபீசின் முத்திரை

யைப் போடுவார்கள். என்னை என் நண்பர்களுடன் சேர்த்து ஒரு பையில் போட்டுக் கட்டுவார்கள். அந்தப் பையை ஒரு வண்டியில் போட்டு இரயிலுக்கு அனுப்புவார்கள்.



இரயிலில் எனக்காக உள்ளவர்கள் என்னை வாங்கிக் கொள்வார்கள். அவர்கள் நான் போக வேண்டிய ஊரிலுள்ள நிலையத்தில் இறக்கி விடுவார்கள். அங்கே என்னை அழைக்க ஆட்கள்




வந்திருப்பார்கள். அவர்கள் என்னை அழைத்துக் கொண்டு போவார்கள்.

இப்பொழுது கொஞ்ச காலமாக நான் மிக விரைவாகப் போகவேண்டிய காலத்தில் ஆகாய

விமானத்திலும் போகிறேன். இப்படி நான் அந்தந்த ஊர்த் தபாலாபீசுகளுக்குப் போய்ச் சேருகிறேன்.

அங்குள்ளவர்கள் என்னை எடுப்பார்கள். என்மேல் அந்த ஊர் முத்திரையைப் போடுவார்கள். பிறகு என்னை அவ்வூரிலுள்ள தபால்காரரிடம் கொடுப்பார்கள். அவர்கள் நான் சேரவேண்டிய வீட்டில் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவார்கள்.



சில இடங்களில் இரயில் நிலையத்திலிருந்து நான் போகவேண்டிய ஊர் தொலைவில் இருக்கும். அப்பொழுது நான் மோட்டாரில் போவேன். இந்தக் காலத்திலும் சில இடங்களில் நான் ஆள் தலையிலும் போய்க் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் நான் போகவேண்டிய இடத்தின் முகவரியைத் தெளிவாக எழுத வேண்டும். இல்லையானல் நான் சரியாய்ப் போய்ச் சேரமாட்டேன்.

என்னல் நீங்கள் தொலைவில் உள்ளவர்களுக்கும் ஐந்து, பத்து, பதினைந்து நயே பைசேச் செலவில் செய்திகளைத் தெரிவிக்கிறீர்கள். உங்களுக்கு நான் எவ்வளவு உதவியாக இருக்கிறேன்! என் உதவியை மறவாதீர்கள்.

| | | |
|---|---|---|
| சவாரி | தபால் பெட்டி | தபாலாபீசு |
| சென்றேன் | தபால்காரர் | இலேபில் |
| முத்திரை | செய்தி | இரயில் நிலையம் |
| ஊர் ஊராய் | முகவரி | தெளிவாக |
| தபால் வண்டி | தொலைவு | நயே பைசே |

## கேள்விகள்

1. தபால் வண்டி என்றால் என்ன ?
2. தபால் முற்காலத்தில் எப்படிச் சென்றது ?
3. தபால் கடிதம் நமக்குச் செய்யும் உதவி என்ன ?

## இலக்கணம்

### வாக்கியங்கள்

இராமன் வந்து இடையனார் பால்
கண்ணன் நின்று

இவைகளில் நமக்கு முழுப்பொருள் விளங்கவில்லை. ஆகையால் இவை வாக்கியங்கள் அல்ல.

இராமன் வந்து நின்றான்.
கண்ணன் நின்று பேசினான்.
இடையனார் பால் கறந்தார்.

இவை முழுப்பொருளைக் கொடுக்கின்றன. அதனால் இவை வாக்கியங்கள் ஆகும்.

கீழே உள்ளவற்றில் முழுப்பொருளைத் தரும் வாக்கியங்களை எடுத்து எழுது :

1. இராஜாஜி அழகாய்ப் பேசினார்.
2. மரம் பூத்து.
3. நெல் விளைந்தது.
4. கன்று துள்ளி.
5. தாயார் சோறு சமைக்கிறாள்.
6. தாத்தா கதை சொன்னார்.
7. குரங்கு மரத்தில் தாவும்.
8. கந்தன் கடைக்குப் போய்.



## 17. ஔவையார்

தமிழ் நாட்டில் முற்காலத்தில் பல பெண் புலவர்கள் இருந்தார்கள். அவர்களில் ஔவையார் மிகச் சிறந்தவராவர். இவர் எளிய வாழ்க்கையை மேற்கொண்டவர்; பிறர் செய்த உதவியை மறவாதவர். ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடின்றி எல்லாரிடத்திலும் இவர் ஒரே தன்மையாகப் பழகுவார். ஏழைகளிடம் இவர் மிக இரக்கமுடையவர்.

ஔவையார் தமிழ் நாடு முழுவதும் சுற்றிப் பார்த்திருக்கிறார். அதனால் தமிழ் நாட்டின் இயற்கை இவருக்கு நன்றாகத் தெரியும். சிறந்த செல்வர்களும் அரசர்களும் இவரை மிக உயர்வாகக் கொண்டாடி இருக்கிறார்கள். இவரைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. அவற்றுள் ஒரு கதையை இங்குப் பார்ப்போம்.

ஔவையார் ஒரு நாள் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது வெயில் அதிகமாயிருந்தது. ஔவையாருக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது. என்ன செய்வதென்று அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

சிறிது தொலைவில் ஔவையார் ஒரு நாவல் மரத்தைப் பார்த்தார். அவர் அதன் நிழலில் சென்று தங்கினார்; மேலே அண்ணாந்து பார்த்தார். அந்த மரத்தின் மேல் மாடு மேய்க்கும் ஒரு சிறு பையன் இருந்தான். ஔவையார் அவனைப் பார்த்து "அப்பா, எனக்குப் பசியாக இருக்கிறது; அத்துடன் நீர்வேட்கையாகவும் இருக்கின்றது. சில நாவல் பழங்களைப் பறித்து எனக்குப் போடுகிறாயா" என்று கேட்டார். அந்தப் பையன் "பாட்டி! உங்களுக்குச் சுட்ட பழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா" என்று கேட்டான். அவன் கேட்டதன் கருத்து ஔவையாருக்கு விளங்கவில்லை. "நாவல் பழங்களில் சுட்ட பழம் ஏது? சுடாத பழம் ஏது? எல்லாம் ஒரே பழந்தானே!" என்று ஔவையார் எண்ணினார். "இது வெயில் வேளை; சுடாத பழமே போடு" என்று கேட்டார்.

உடனே பையன் ஒரு கிளையை உலுக்கினான். பழுத்த பல நல்ல பழங்கள் கீழே விழுந்தன. அவற்றை ஔவையார் பொறுக்கி எடுத்தார். அவற்றில் ஒட்டியிருந்த மண்ணைப் போக்க வாயால் ஊதினார். உடனே பையன் சிரித்துக் கொண்டே "பாட்டி! சுடாத பழந்தானே நீங்கள் கேட்டீர்கள்? அப்படியிருக்கச் சுட்ட பழத்தை

எடுத்து ஏன் ஊதுகிறீர்கள்? பழம் சுடுகிறதா என்ன?'' என்று கேட்டான். புலமை மிக்க ஔவையாருக்குப் பையன் முதலில் சொல்லியதன் கருத்து இப்பொழுது விளங்கி விட்டது. அதனால் சுட்ட பழம் என்றால் நன்றாகக் கனிந்த பழம் என்றும், சுடாத பழமென்றால் நன்றாகப் பழுக்காத பழம் என்றும் ஔவையார் தெரிந்து கொண்டார். ''நாம் எவ்வளவோ படித்திருந்தும் இச்சிறுவனிடம் ஏமாந்து விட்டோமே! அவனுடைய கருத்தை முதலில் நாம் தெரிந்து கொள்ளவில்லையே'' என்று தமக்குள்ளே வெட்க மடைந்தார். ''நாம் கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு'' என்று சொன்னார். ஔவையார் வருந்துவதைப் பார்த்து மாடு மேய்க்கும் சிறுவன், தான் முருகக் கடவுள் என்பதை உணர்த்தி மறைந்தான்.

| | | |
|---|---|---|
| எளிய வாழ்க்கை | வெட்கம் | சுற்றிப் பார்த்து |
| வேறுபாடு | பொருள் | பொறுக்கி |
| சுட்ட பழம் | இயற்கை | கற்றது |
| சுடாத பழம் | ஏமாந்து | கல்லாதது |
| உலகளவு | ஒட்டியிருந்த | உலுக்கினான் |
| புலமை | கருத்து | எவ்வளவோ |

கேள்விகள்

1. ஔவையாரின் சிறந்த குணங்களைச் சொல்லு.
2. மாடு மேய்க்கும் சிறுவன் ஔவையாரைக் கேட்ட கேள்வி என்ன?
3. சுட்டபழம், சுடாத பழம் என்றால் என்ன?
4. ஔவையார் கடைசியில் என்ன சொன்னார்?



## 18. பாரதியார்

நமது பாரத நாடு விடுதலை அடைவதற்காகப் பாடுபட்டவர் பலர். அவர்களுள் சுப்பிரமணிய பாரதியாரும் ஒருவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டையபுரத்தில் 1882-ஆம் ஆண்டில் பிறந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சின்னசாமி அய்யர். தாயார் பெயர் இலட்சுமி அம்மாள்.

பாரதியார் இளமையில் தகப்பனுரிடமே தமிழை நன்ருகக் கற்ருர். ஒன்பது வயதிலேயே அவருக்குக் கவி பாடும் திறமை வந்துவிட்டது. இவரது கவித்திறமையைக் கண்ட புலவர்கள் 'பாரதி' என்ற பட்டத்தை இவருக்கு அளித்தார்

கள். அது முதல் இவரை எல்லோரும் பாரதி என்றே அழைப்பது வழக்கம்.

பாரதியார் தம் வாழ்க்கையில் சில காலம் எட்டையபுரத்தில் அரண்மனைப் புலவராக இருந்தார். பாரதியாருக்கு எப்பொழுதும் சுதந்திரத்தில் விருப்பம் அதிகம்; அதனால் அவ்வேலையை விட்டார். சென்னைக்குச் சென்றார்; 'சுதேசமித்திரன்' பத்திரிகைக்கு உதவி ஆசிரியராக இருந்தார்.

பிறகு அந்த வேலையையும் அவர் விட்டார். 'இந்தியா', 'பாலபாரதம்' என்னும் பத்திரிகைகளை நடத்தலானார். அப்பத்திரிகைகளில் அப்பொழுதிருந்த ஆங்கில அரசாட்சியின் குறைகளை அவர் எடுத்துக் காட்டினார்; மக்களுக்குச் சுதந்திர உணர்ச்சியை ஊட்டினார். அதனால் அரசாங்கத்தார் இவரைக் கவனிக்கத் தொடங்கினர்.

அச்சமயம் பல தேச பக்தர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். பாரதியார் தம்மையும் சிறை செய்யக்கூடும் என்று அறிந்து சென்னையை விட்டார்; பிரெஞ்சு ஆட்சியில் இருந்த புதுச்சேரிக்குச் சென்றார். புதுச்சேரியில் சுமார் பத்து ஆண்டுகள் இருந்தார். அப்பொழுது அவர் வறுமையால் பட்ட துன்பம் கொஞ்ச நஞ்சமன்று.

இவ்வளவு இருந்தும் அவர் தமிழ்த் தாயையும் நாட்டையும் மறக்கவேயில்லை. பல அருமையான தமிழ்க் கவிகளை இயற்றினார். அவர் பாடல்கள் தெளிவானவை. படிக்கப் படிக்க இனிமையைத் தரும்; சுதந்திர உணர்ச்சியை எழுப்பும்; தமிழ் மொழியில் மிகுந்த அன்பை உண்டாக்கும். சிறு

பிள்ளைகளும் எளிதில் அவற்றைப் படிக்கலாம். அர்த்தம் தெரிந்து கொள்வது எளிது. அவருடைய பாடல்களில் 'ஓடி விளையாடு பாப்பா,' 'செந்தமிழ் நாடெனும் போதினிலே' முதலிய பாடல்களை இன்றைக்கும் எல்லோரும் பாடுவது உங்களுக்குத் தெரியும். நீங்களும் பாடி மகிழ்வீர்கள்.

பாரதியார் புதுச்சேரியை விட்டார். மறுபடியும் சென்னைக்குச் சென்றார். முன்போலவே 'சுதேசமித்திரன்' பத்திரிகைக்கு உதவி ஆசிரியராக அமர்ந்தார். ஒரு நாள் திருவல்லிக்கேணியிலுள்ள பார்த்தசாரதி கோயிலுக்கு அவர் சென்றார். அந்தக் கோயிலிலுள்ள யானைக்கு விளாம்பழம் கொடுத்தார். யானை இவரைக் கீழே தள்ளி விட்டது; காயம் அடைந்தார்; பலநாள் படுக்கையிலிருந்தார். 1921-ஆம் ஆண்டில் இறந்தார்.

நாட்டுப்பற்று, தமிழ்மொழியில் ஆர்வம், ஏழைகளிடம் இரக்கம், கடவுள் அன்பு, துணிவு, எல்லோரையும் சமமாக எண்ணுதல் முதலிய பண்புகள் பாரதியாரிடம் நிறைந்திருந்தன.

| | | |
|---|---|---|
| ஆர்வம் | கொஞ்ச நஞ்சம் | பாரதி |
| தேசபக்தர் | வறுமை | பட்டம் |
| உணர்ச்சி | பத்திரிகை | கவித்திறமை |
| எளிதில் | ஊட்டினர் | உதவியாசிரியர் |

### கேள்விகள்

1. பாரதியார் எங்கே பிறந்தார்?
2. பாரதியாருக்கு அப்பட்டப் பெயர் எப்படி வந்தது?
3. பாரதியாரது பாடல்கள் எப்படிப்பட்டவை?
4. அவரது பண்புகளைப் பற்றிச் சொல்லுக.
5. பாரதியார் எப்படி இறந்தார்?

## 19. செந்தமிழ் நாடு

1. செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே.

2. காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி—என
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு.

3. நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு.



4. கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு.

5. வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு.

—பாரதியார்

# 20. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்

1. அண்ணன் வந்தான்.
2. வேலன் பாடத்தைப் படித்தான்.

1. அண்ணன் என்று மட்டும் இருந்தாலும் வாக்கியமாகாது; வந்தான் என்று மட்டும் இருந்தாலும் வாக்கியமாகாது. அதனால் இந்த இரண்டு சொற்களும் வாக்கியத்திற்கு முதன்மையானவை. இந்த முதன்மையான சொற்களில் முதலில் வருகிற 'அண்ணன்' என்பதை 'எழுவாய்' என்றும், 'வந்தான்' என்பதை 'பயனிலை' என்றும் சொல்வார்கள்.

2. வேலன் பாடத்தைப் படித்தான். இதில் 'பாடத்தை' என்ற சொல் ஒன்று கூட வந்திருக்கிறது. அது வேலன் எதைச் செய்தான் என்பதைத் தெரிவிக்கிறது. இதைச் 'செயப்படுபொருள்' என்று சொல்வார்கள்.

சில வாக்கியங்களில் எழுவாய், பயனிலை இந்த இரண்டு மட்டும் இருக்கும். சில வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இம் மூன்றும் இருக்கும்.

கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைத் தெரிந்துகொள்.

1. கோழி கூவுகிறது.
2. பசு புல்லை மேய்ந்தது.
3. குழந்தை பாலைக் குடிக்கிறது.
4. யானை கரும்பைத் தின்கிறது.
5. கிளி பறக்கிறது.

# 21. மின்சாரம்

என் ஆற்றலை நீங்கள் அறிவீர்களா? என்னை நீங்கள் கண்ணால் காணமுடியாது. ஆயினும் என்னால் நீங்கள் பெரும் பயன்களை அடைகிறீர்கள். என்னை நிறைத்து வைத்திருக்கும் இடத்தில் நீங்கள் அருகில் வரக்கூடாது. அவ்விடத்தில் 'அபாயம்' என்று எழுதி வைத்திருப்பார்கள். நான் செல்லும் கம்பிகளை நீங்கள் தொடக்கூடாது. தொட்டால் உயிருக்கே மோசம். ஆயினும் இக்காலத்தில் மக்கள் எல்லோரும் என் உதவியை நாடுகிறார்கள்.

இன்று என்னால் நடக்காத காரியம் ஒன்றுமில்லை. இரவும் பகலும் இடைவிடாமல் உழைக்கிறேன்.

என்னுடைய வெளிச்சத்தை இப்போது எல்லோரும் விரும்புகிறார்கள். வீட்டுக்குள்ளும் நான் என் ஒளியைத் தருகிறேன். தெருவெல்லாம் என் ஒளியைப் பரப்பி வீசுகிறேன். மலை உச்சியிலும் 'பளிச்' என்று விளங்குகிறேன். கோபுரத்தின் மீதும் நான் ஒளிமயமாக விளங்குகிறேன். காற்று நுழையாத அறைகளிலும் என் உதவியால் காற்றோட்டம் உண்டாகிறது.

புகைவண்டிகளுக்குள்ளும், மோட்டார் வண்டிகளுக்குள்ளும் கூட நான் என் வெளிச்சத்தைப் பரப்புகிறேன். இரவு நேரத்தில் கடைத் தெருக்கள் வெளிச்சம் பெற்று அழகாகக் காண்பது என்னுடைய ஒளியாலேயே. மணப்பந்தல்கள் ஒளியுடன் விளங்குவது என்னாலேதான். திருவிழாக்களையும் நான் என் ஒளியால் சிறக்கச் செய்கிறேன்.

மக்கள் என்னுல் பெறும் உதவிகள் வெளிச்சம் மட்டுமா! இன்னும் பலப்பல. இயந்திரங்கள் என் விசையைப் பெற்ருல் மிக விரைந்து வேலை செய்கின்றன. இரயில் எஞ்சின் என் விசையைப் பெற்ருல் மிகமிக வேகமாய் ஓடும்.

விவசாயிகள் கிணற்றிலிருந்து நீர் இறைக்கவும் என் உதவியைப் பெறுகிருர்கள். ஆள் இல்லாமலும், மாடு இல்லாமலும் கிணற்று நீரை மிகவும் விரைவில் இறைத்துக் கொடுக்கிறேன்.

உலகத்தில் பலவகைச் செயல்கள் என் உதவியாலே நடைபெறுகின்றன. தந்திச் செய்திகள் ஊர் ஊராகச் செல்வது என்னுலே. மக்கள் டெலிபோனில் (பேச்சுத் தந்தியில்) பேசுவதும் என் உதவியாலே. திரைப் படங்கள் அசைவதும் என் உதவியாலேயே. இவைபோல இன்னும் பற்பல நலன்களை என் ஆற்றலைக் கொண்டு மக்கள் அடைகிருர்கள்.

என் ஆற்றலை அறிவாளிகள் கண்டுபிடித்தார்கள். மேட்டூர், பைக்காரா முதலிய இடங்களில் என் ஆற்றலை வெளிப்படுத்திச் சேமிக்கிருர்கள். எல்லா ஊர்களுக்கும் என்னை அனுப்புகிருர்கள். செப்புக் கம்பிகள் நான் செல்லும் பாதைகள்.

என் ஆற்றல் விளம்பரம் ஆகி இன்னும் நூறு ஆண்டுகூட ஆகவில்லை. மனிதர்களின் சிறந்த வேலையாளாக நான் எங்கும் விளங்குகிறேன். என் பெயர் என்ன? மின்சாரம்.

| | | |
|---|---|---|
| அபாயம் | உயிருக்கே மோசம் | வீசுகிறேன் |
| ஆற்றல் | நிறைத்து | ஒளிமயமாய் |
| ஒன்றல்ல | நாடுகிருர்கள் | பரப்புகிறேன் |
| பலப் பல | விசை | நொடி |
| கண்டுபிடித்தார்கள் | இடையூறு | இடைவிடாது |
| நடவாதகாரியம் | இயந்திரங்கள் | மின்சாரம் |

### கேள்விகள்

1. மின்சாரம் பரவிச் செல்லும் பாதை எது ?
2. மின்சாரக் கம்பியைத் தொட்டால் என்ன ஆகும் ?
3. மின்சார உதவியால் எந்தெந்த இடங்கள் ஒளி பெறுகின்றன ?
4. மக்களின் சிறந்த வேலை ஆள் எது ?
5. 'அபாயம்' என்று எங்கே எழுதி வைத்திருப்பார்கள் ?

### பயிற்சி

ஏற்ற பெயர்ச் சொற்களைச் சேர்த்துப் படி :

1. எங்கள் வீட்டில் மின்சார —— இருக்கிறது.
2. மின்சாரக் ——த் தொடக்கூடாது.
3. —— மின்சாரத்தைக் கண்டுபிடித்தார்கள்.
4. பலவகைச் —— மின்சாரத்தால் நடைபெறுகின்றன.
5. —— டெலிபோனில் பேசுவதும் என் உதவியாலேயே.
6. —— —— அசைவதும் என் உதவியாலேயே.

# 22. ஓலைத் தொழில்

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குக் கைத் தொழில்கள் இன்றியமையாதவை. கையினால் செய்யப்படுகின்ற தொழில்களுக்குக் கைத்தொழில் கள் என்று பெயர். தொழில்கள் செய்வதற்காகவே நமக்குக் கைகள் ஏற்பட்டிருக்கின்றன. இக்கைத் தொழில்களைக் குடிசைத் தொழில்கள் என்றும் சொல்வார்கள். இக்குடிசைத் தொழில்கள் பல வகைப்படும். அவற்றுள் ஓலைத்தொழில் என்பது ஒன்று. இத்தொழிலுக்குத் தென்னை, பனை, ஈந்து இவற்றின் ஓலைகள் பயன்படுகின்றன.

தென்னையின் குருத்தோலைகளை இடை யிடையே நறுக்கிப் பின்னித் தோரணங்களாகக் கட்டுவார்கள். கிளி, பாம்பு முதலிய உருவங்களை யும் செய்து பந்தல்களில் கட்டுவார்கள். கோயில் களின் திருவிழாக் காலங்களில் பல உருவங்களையும் செய்து அவற்றால் தேர் முதலியவற்றை அழகு படுத்துகிறார்கள். இத்தொழிலில் சிறந்தவர்கள் நம் தமிழ் நாட்டில் அதிகம்.

முற்றிய ஓலைகளைக் கீற்றுக்களாக முடை வார்கள். அக் கீற்றுக்களைக் கூரை வேய்வதற்கும், படல் போல் மறைப்புக்கள் கட்டுவதற்கும் பயன் படுத்துகிறார்கள். சிலர் இக்கீற்றுக்களைப் பாயா கவும் பயன்படுத்துகிறார்கள். தென்னை ஓலைகளைக் கொண்டு பூக்குடலைகளும் பின்னலாம். இக்கீற்றுக் களில் இரண்டை மடித்துக் கட்டி மழைக் காலத்தில் குடைகளுக்குப் பதிலாக பயன்படுத்துவதும் உண்டு.

பனை ஓலையினுலும் நம் நாட்டில் பல பொருள்கள் செய்யப்படுகின்றன. இவ்வோலை விசிறி செய்வதற்குச் சிறந்தது. இவ்வோலை களுக்குச் சாயந் தோய்த்துச் சித்திர வேலைப் பாடுள்ள கூடை, முறம், கிலுகிலுப்பை முதலிய பலவகைப் பொருள்களைச் செய்கிருர்கள். மேலும் வெற்றிலை பாக்குத் தட்டு, தூக்குப்பை, தூக்குக் கூடை, தடுக்கு, படுக்கைப் பாய், வண்டிப் பாய் முதலியவைகளும் பனை ஓலைகளால் பின்னப் படுகின்றன. இத்தொழில் நம் தமிழ் நாட்டில் இராமனுதபுரம், புதுக்கோட்டை முதலிய இடங் களில் சிறப்பாக நடைபெறுகின்றன. பனை ஓலை களைக் கொண்டு கிராமங்களில் கூரைகள் வேய் கிருர்கள். மறைப்புக்களும் கட்டுகிருர்கள். தென்னை ஓலையைக் காட்டிலும் பனை ஓலையே பலவிதப் பொருள்கள் செய்யப் பயன்படுகின்றது.

ஈந்தின் ஓலையைக் கொண்டும் பாய் பின்னு கிருர்கள். அப்பாய்கள் நெல் முதலியவைகளை உலரவைப்பதற்கும், வண்டிகளின் கூடுகளுக்கும் பயன்படுகின்றன. இப்பாய்களில் பாக்கு, புளி, வெல்லம் முதலிய பொருள்களைக் கட்டி வெளியூர் களுக்கு அனுப்புகிருர்கள்.

பொதுவாக இவ்வோலைத் தொழில்களைப் பெரும்பாலும் நம் நாட்டில் பெண்களே செய்து வருகிருர்கள். பள்ளிப் பிள்ளைகளும் புதிய முறையில் இவ்வோலைத் தொழிலைக் கற்றுக் கொள்வது நல்லது.

| | | |
|---|---|---|
| முன்னேற்றம் | தடுக்கு | பள்ளிப்பிள்ளை |
| வேய்வதற்கு | சித்திரவேலைப்பாடு | கிலுகிலுப்பை |
| குருத்து | மறைப்புக்கள் | தோரணம் |
| சாயம் தோய்த்து | | |

## கேள்விகள்

1. நாட்டின் முன்னேற்றத்திற்கு எவை இன்றியமையாதவை ?
2. குருத்தோலைகளால் என்னென்ன செய்யலாம் ?
3. முற்றிய ஓலைகளைக் கொண்டு என்னென்ன பின்னலாம் ?
4. பனையோலையால் செய்யப்படும் பொருள்கள் நான்கு சொல்லு.
5. ஈச்சம்பாய் எவைகளுக்குப் பயன்படுகிறது ?

## பயிற்சி

ஏற்ற வினைச் சொற்களைச் சேர்த்துப் படி :

1. ஓலைகளைக் கொண்டு பூக்குடலைகள் —— .
2. ஓலைகளால் பலவகைப் பொருள்கள் —— .
3. பந்தலில் தோரணம் —— .
4. முற்றிய ஓலைகளைக் கீற்றுக்களாக —— .
5. ஓலைத் தொழிலால் பலர் —— .
6. ஓலைகளுக்குச் சாயம் —— .
7. பனை ஓலைகளால் கூரையும் —— .
8. பெண்கள் பலர் ஓலைத் தொழிலைச் —— .
9. பனை ஓலையால் விசிறி —— .

# 23. ஆராய்ச்சிமணி

முற்காலத்தில் குடிகளுக்கு ஏதாவது குறை நேர்ந்தால் அதை அரசனிடம் சென்று நேரில் தெரிவிப்பார்கள். அவர்கள் அரசன் வசிக்கும் அரண்மனைக்குச் செல்வார்கள். காவற்காரர் களிடம் சொல்லியனுப்பி அரசன் கட்டளை பெற்று உள்ளே செல்வார்கள். சில வேளைகளில் காவற் காரர்கள் 'இப்பொழுது அரசனைக் காண முடியாது' என்று தடை செய்தாலும் செய்யலாம். குடிகளுக்கு இவ்விதத் தொந்தரவு நேராமலிருப்ப தற்காக அரசர்கள் அரண்மனை வாயிலில் ஒரு பெரிய மணியைக் கட்டிவைப்பார்கள். குறை நேர்ந்தபொழுது குடிகள் அரண்மனைக்குச் சென்று தாங்களே அம்மணியை அடிப்பார்கள். மணி யோசை கேட்ட உடனே அரசன் விரைந்து வருவான். குறைகளைக் கேட்பான்; குறைகளைத் தீர்த்து அனுப்புவான். இது நம் நாட்டில் பழங்கால அரசர்களுடைய வழக்கம்.

சோழ நாட்டில் திருவாரூர் என்பது ஒரு சிறந்த நகரம். அந்நகரத்தில் மனுநீதிச் சோழன் என்ற ஓர் அரசனிருந்தான். அவனுக்கு வீதி விடங்க னென்ற அருமையான ஒரே மகனிருந் தான். அவன் ஒரு நாள் அரச வீதியில் தேரிற் சென்றான். பலர் அவனைச் சூழ்ந்து தேரிற் சென்றார்கள். அப்பொழுது தற்செயலாக ஓர் இளம் பசுக்கன்று தேர்க்காலில் அகப்பட்டு இறந்து விட்டது.

அதைக் கண்ட தாய்ப்பசு "அம்மா! அம்மா!"

என்று அலறிக்கொண்டு ஓடி வந்தது. கன்றை மோந்து மோந்து பார்த்தது. சுற்றிச் சுற்றி வந்தது; பெருமூச்சு விட்டது; கண்ணீர் வடித்தது; அரண்மனைக்கு ஓடிற்று; அங்கிருந்த ஆராய்ச்சி மணியை அடித்தது.



இதுவரையில் கேட்கப்படாத மணியின் ஓசையை அரசன் கேட்டான். விரைந்து ஓடி வந்தான். கண்ணீருடன் நின்ற பசுவைக் கண்டான். அதற்கு என்னகுறை நேர்ந்ததென்று அருகில் நின்றவர்களைக் கேட்டான். நடந்த செய்தியைத் தெரிந்துகொண்டான். தனக்கு ஒரு மகன்தான் இருக்கிறான் என்பதையும் அவன் கருதவில்லை. முறையைக் காப்பதே கடமை என்று அவன் எண்ணினான். பசுக்கன்று இறந்த அவ்விடத்திலேயே தன் மகனைப் படுக்கவைத்தான். அவன் மார்பின்மீது தேரைச் செலுத்தி அவனைக் கொன்றான். அதைப் பார்த்துக் குடிகள் திகைப்பு

அடைந்தார்கள். கடவுள் அவன் முன் தோன்றினார்; பசுக்கன்றையும் மகனையும் எழுப்பித் தந்தார். "மநுநீதிச் சோழன் வாழ்க; வீதிவிடங்கன் வாழ்க!" என்று குடிகள் வாழ்த்தினார்கள்.

| | | |
|---|---|---|
| ஆராய்ச்சிமணி | குறை | நேர்ந்தால் |
| கட்டளை | தீர்த்து | முறை |
| அரச வீதி | கண்ணீர் | பசுக்கன்று |
| சுற்றிச் சுற்றி | வடித்தது | தேர்க்கால் |
| பெருமூச்சு | எழுப்பி | திகைப்பு |

### கேள்விகள்

1. மநுநீதிச் சோழன் எங்கே ஆண்டு வந்தான்?
2. பசுக்கன்று எப்படி இறந்தது?
3. கன்றை இழந்த பசு என்ன செய்தது?
4. சோழன் என்ன செய்தான்?
5. வீதிவிடங்கனும், பசுக்கன்றும் எவ்வாறு உயிர் பெற்றார்கள்?

### பயிற்சி

**கவனி :**

அவன் இங்கே வருகிறான்.
அவர்கள் இங்கே வருகிறார்கள்.

இம்மாதிரி பின் வரும் வாக்கியங்களை முடித்துக் கூறுக:—

1. மாடு மேய் ———.
   மாடுகள் மேய் ———.
2. வீதியில் வண்டி ———.
   வீதியில் ——— ஓடுகின்றன.
3. அவன் கண்ணீர் ———.
   ——— கண்ணீர் வடித்தார்கள்.



# 24. கிணறும் குழாயும்

**கிணறு** :—குழாயே, இங்கே வா. நான் பிறந்தது உனக்குத் தெரியுமா ?

**குழாய்** :—எனக்குத் தெரியாது தாத்தா.

**கிணறு** : உனக்கு என்ன வயது ?

**குழாய்** :—ஏறக்குறைய ஐம்பதிருக்கும்.

**கிணறு** :—நீ தோன்றியதால் அல்லவோ என் மதிப்பெல்லாம் போய்விட்டது. இப்படிப் பெரியவர்களின் மதிப்பைக் கெடுக்கவா நீ உலகத்தில் பிறந்தாய் ?

**குழாய்** :—தாத்தா ! என்னுல் உங்களுடைய மதிப்பு என்ன போய் விட்டது ?

**கிணறு** :—என் தண்ணீரை இப்பொழுது யாரும் சீந்துவதில்லை. என்னை நாற விட்டு விடுகிருர்கள். சில இடங்களில் என்னை மூடி

விடுகிறுர்கள். இது உன்னுல் வந்த கெடுதல் தானே எனக்கு ?

**குழாய்** :—தாத்தா, உங்கள் தண்ணீரை எடுப்பதற்குக் கயிறும் வாளியும் வேண்டும். கயிற்றைப் பிடித்து இழுத்தால் கை எரிகிறது. சில வேளைகளில் தவறி உங்களடியில் விழுந்து விட்டால் விழுந்தவர் உயிரையே விழுங்கி விடுகிறீர்கள். குழந்தை குட்டிகளுக்குப் பயந்து உங்களுக்குக் கைப்பிடிச்சுவர் வேறு கட்ட வேண்டியிருக்கிறது. குனிந்து தண்ணீர் இழுப்பது கடினமான வேலே. ஆகையால் இராட்டினமும் போட வேண்டியிருக்கிறது. நான் வீட்டிற்குள் எங்கு வேண்டுமானுலும் செல்வேன். மாடிமேலும் ஏறுவேன். மக்கள் இருக்கும் இடம் தேடிச் சென்று நான் நீரைக் கொடுக்கிறேன். ஒரு திருகு திருகினுல் போதும்; பாத்திரத்தை நிரப்பிவிடுகிறேன். அதனுல் என்னே மக்கள் விரும்புகிறுர்கள்.

**கிணறு** : நீ எல்லா இடங்களிலும் நாள் முழுவதும் வருகிறுயா ? வேண்டிய பொழுது நீ எங்கே உதவி செய்கிறுய்; வந்துகொண்டேயிருக்கிறுய்; திடீரென்று நின்று விடுகிறுய். அதனுல், மக்கள் எவ்வளவு துன்பப்படுகிறுர்கள் தெரியுமா ? வேண்டிய அளவு தண்ணீர் எப்பொழுதும் கொடுப்பதில்லே. அதனுல் உன் நேரம் பார்த்து உன் அடியில் தவலேகளும் குடங்களும் வந்து காக்க வேண்டியிருக்கின்றன. அப்போது நீ வம்புக் குழாயாகவும் ஆகிவிடுகிறுய். பெண்கள் ‘ நான் முதலில் வந்தேன். நான் தான் பிடிப்பேன் ’ என்று போடும் சண்டை மண்டை உடைந்து விடுகிறதே ! அவர்கள் பேசும் வார்த்தைகளே

காதால் கேட்கவும் முடியவில்லையே. உன்னடியில் நடக்கும் சண்டையைப் படம்பிடித்துக் காட்டினால் ஒரு பெரிய படக் காட்சியாகுமே.

நான் எப்பொழுதும் யாருக்கும் எவ்வளவு வேண்டுமானாலும் தண்ணீர் கொடுப்பேனே. நான் காலங்கடந்தவனாதலால் எக்காலத்திலும் தண்ணீர் கொடுக்கிறேன்.

**குழாய்** :—தாத்தா! நீங்கள் சொல்வது அவ்வளவும் ஒருவகையில் உண்மைதான். துன்பமில்லாமல் உலகில் இன்பமில்லை. நம் இருவராலும் மக்களுக்குத் துன்பமும் இருக்கிறது; இன்பமும் இருக்கிறது. ஆதலால் தாங்களில்லாத இடத்தில் நானும், நானில்லாத இடத்தில் தாங்களும் இருந்து மக்களுக்கு உதவி செய்வோம். உதவி செய்வதற்கென்றே உலகில் ஒவ்வொருவரும் பிறக்கின்றனர்.

| | | |
|---|---|---|
| குழாய் | தேடிச் சென்று | விழுங்கி |
| மதிப்பு | இருக்குமிடம் | குழந்தை குட்டி |
| திருகு | காலங்கடந்தவன் | கைப்பிடிச்சுவர் |
| படக் காட்சி | எக்காலத்திலும் | வம்புக் குழாய் |
| இன்பம் | சீந்துவது | துன்பம் |

### கேள்விகள்

1. குழாயை மக்கள் ஏன் விரும்புகிறார்கள்?
2. கிணறு குழாயை நோக்கி என்ன குறைகள் கூறிற்று?
3. கடைசியாகக் குழாய் என்ன முடிவு கூறிற்று?




## 25. கப்பலோட்டிய வீரத்தமிழர்

(வ. உ. சிதம்பரம் பிள்ளை)

நம் பாரத நாடு விடுதலை அடையப் பாடு பட்ட தமிழர்களுள் வ. உ. சிதம்பரம் பிள்ளை மிகச் சிறந்தவர் ஆவார். இவர் திருநெல்வேலி மாவட் டத்தில் உள்ள ஒட்டப்பிடாரம் என்ற ஊரில் பிறந்தவர். இவர் முதலில் நம் தமிழ் மொழியைக் கற்ருர். பிறகு ஆங்கில மொழியைக் கற்றுச் சட்டக் கல்வியிலும் தேர்ச்சி பெற்ருர். வழக்கறிஞர் தொழிலைச் செய்ய இவர் ஆரம்பித்தார்.

இவருக்கு ஒரு நாட்டின் செல்வச் சிறப்புக்கு

வர்த்தகமே காரணம் என்ற எண்ணம் உண்டா யிற்று. அதற்குக் கப்பல் தொழில் அவசியம் என்று உணர்ந்தார். ஆங்கிலேயர்கள் தூத்துக்குடியி லிருந்து பிற நாடுகளுக்குக் கப்பல் மூலம் வியா பாரம் செய்து நிரம்பப் பொருள் பெறுவதையும் கண்டார். அதனால் நாமும் கப்பல் ஓட்டிப் பொருள் தேட வேண்டும் என்று உறுதிகொண்டார். அதற்காக வடநாட்டிலும், தென்னாட்டிலும் பல ரிடம் சென்று பொருள் சேர்த்தார். அந்தப் பொருளைக்கொண்டு 'இலாவோ', 'காலியா' என்ற பெயர்களையுடைய இரண்டு கப்பல்களை வாங்கினார்.

'சுதேசிக் கப்பல் கம்பெனி' என்னும் பெயரை வைத்துத் தம் கம்பெனியைப் பதிவு செய்தார்; கப்பல்களை ஓட்டினார். ஆங்கில வியாபாரிகள் இவருக்குப் பலவித இடையூறுகள் செய்தனர். இவருடைய கப்பல்கள் தூத்துக்குடியிலிருந்து இலங்கைக்குச் சென்று கொண்டிருந்தன. ஆங்கி லேயர்கள் "ஒரு இலட்சம் ரூபாய் கொடுக் கின்றோம். நீங்கள் எங்களுடன் போட்டி போட வேண்டாம்" என்று பிள்ளையவர்களுக்குச் சொன்னார்கள். பிள்ளையவர்கள் அந்த இலட்சம் ரூபாயையும் பொருட்படுத்தவில்லை.

இப்படியிருக்கும் பொழுது இவர் நாட்டுத் தொண்டிலும் ஈடுபட்டார். அதனால் இவர் சிறை செல்லும்படி நேர்ந்தது. இவர் சிறைக்குச் சென்ற தால் இவரது கப்பற் கம்பெனி சரியாக நடைபெற வில்லை. சிதம்பரம் பிள்ளைக்கு நம் தமிழில் பற்று அதிகம். திருக்குறளில் இவருக்குத் தனிப்பட்ட விருப்பம் உண்டு. நாள் தோறும் இவர் திருக்

குறளைப் படிப்பார். இவர் தமிழைப் பலருக்குக் கற்பித்திருக்கிறார். இவரிடம் பலர் திருக்குறள் படித்திருக்கின்றார்கள். இவர் 'மனம் போல வாழ்வு' 'வலிமைக்கு மார்க்கம்' முதலிய பல நூல் களைத் தமிழில் எழுதியிருக்கிறார்.

சிதம்பரம் பிள்ளையவர்கள் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; இவர் எடுத்த காரியத்தை முடிக்கும் மன உறுதி படைத்தவர்; பொறுமை உள்ளவர்; கடவுள்மீது அன்பு உள்ளவர்; பிறர் செய்த உதவி யை மறவாதவர்; ஆங்கிலேயருக்குப் போட்டியாக இவர் ஒருவர் தான் முதலில் நம் நாட்டில் கப்பல் ஓட்டியவர்; அதனால் இவருக்குக் 'கப்பலோட்டிய வீரத்தமிழர்' என்ற பெயர் வழங்குகிறது.

| | | |
|---|---|---|
| பொருள் | படைத்தவர் | நாட்டுத்தொண்டு |
| சுதேசி | கம்பெனி | இடையூறு |
| சட்டக்கல்வி | பதிவு | உறுதி |
| வழக்கறிஞர் | கப்பல் தொழில் | பொருளுதவி |
| செல்வச்சிறப்பு | ஆங்கிலேயர் | பற்று |
| போட்டி | நிரம்ப | அஞ்சாநெஞ்சம் |

## கேள்விகள்

1. சிதம்பரம் பிள்ளை பிறந்த ஊர் எது?
2. சிதம்பரம் பிள்ளை ஓட்டிய கப்பல்களின் பெயர் களைக் கூறுக.
3. சிதம்பரம் பிள்ளைக்கு எந்த நூலில் தனிப்பட்ட விருப்பம்?
4. சிதம்பரம் பிள்ளை எழுதிய நூல்களில் இரண்டு கூறுக.
5. சிதம்பரம் பிள்ளை எத்தகைய தன்மைகளை உடையவர்?

## 26. வாழ்த்து

பாலைவனம் சோலைவன மாக வேண்டும்;
பசுங்கிளிகள் அங்கிருந்து பாட வேண்டும்;
சாலைகளிற் பலதொழிலும் பெருக வேண்டும்;
சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும்;
சீலைஉடை கதருடையாய்த் திகழ வேண்டும்;
தேசபக்தி செழித்தோங்கி வளர வேண்டும்;
வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டும்;
வெற்றியின்மேல் வெற்றிஎமக் கெய்த வேண்டும். 1

பருவமழை பொய்யாது பெய்ய வேண்டும்;
பயிர்களெலாம் செழித்தோங்கி வளர வேண்டும்;
தருமநெறி தவருது தழைக்க வேண்டும்;
சாதிமதச் சண்டையெலாம் ஒழிய வேண்டும்;
திருமகளும் கலைமகளும் சிறக்க வேண்டும்;
தேசாபி மானமெங்கும் திகழ வேண்டும்;
கருமமெலாம் நற்கரும மாக வேண்டும்;
காந்திமதி நின்னடிகள் வாழ்த்தி னேனே. 2

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை

# 27. கரடி

கரடி என்பது ஒரு விலங்கு. அது காட்டில் வாழும் கொடிய விலங்குகளுள் ஒன்று. அது கரிய நிறமும், உடல் எல்லாம் அடர்ந்த மயிரும் உடையது. பனி மிகுந்த நாடுகளில் வெள்ளைக் கரடிகளும் இருக்கின்றன.

இவ்விலங்கு உடல் வலிமை உடையது. மனிதரைக் கண்டால் எதிர்த்துச் சண்டை செய்யக் கூடியது. மனிதன் கரடியிடம் அகப்பட்டுக் கொண்டால் அதை வெல்லுவது அரிது. மிக்க வலிமையுடைய வீரர்கள் கரடியோடு சண்டை செய்து அதை வெல்லுவதும் உண்டு. கரடி மற்ற விலங்குகளைப் போல் நான்கு கால்களாலும் நடக்கும்; மனிதரைப் போல் இரண்டு கால்களாலும் நடக்கும். கரடி கொடிய விலங்கே ஆயினும், அதை மனிதர்கள் பிடித்துப் பழக்கலாம். சர்க்கசுக்காரர்கள் கரடியைக் கொண்டு பல வேடிக்கைகள் செய்து காட்டுகிறார்கள்.

புலால் தின்னும் விலங்குகளுள் கரடியும் ஒன்று. ஆனால் அதனிடம் ஓர் அரிய தன்மை உண்டு. கரடி, தான் அடித்துக் கொன்ற உயிர்களையே தின்னும். தானாகச் செத்துக் கிடப்பதை அது ஒருபோதும் தின்னாது. இதைப் பற்றி ஒரு கதையும் வழங்குகிறது.

இரண்டு நண்பர்கள் ஒரு காட்டு வழியே போய்க்கொண்டு இருந்தார்கள். அப்பொழுது எதிரில் ஒரு கரடி வருவதைக் கண்டார்கள். அவர்களுள் ஒருவன் துணிவு உடையவன். "நாம்

இருவரும் சேர்ந்து இவ்விலங்கை எதிர்த்துக் கொல்லுவோம்'' என்ருன். அதற்கு மற்றவன் ''முடியாது, முடியாது; எனக்கு மரம் ஏறத் தெரியும்; நான் தப்பிக் கொள்வேன்'' என்று சொன்ஞன். உடனே அருகிலிருந்த ஒரு மரத்தின் மேல் ஏறி ஒளிந்து கொண்டான்.

மரம் ஏறத் தெரியாதவன் கீழே படுத்துக் கொண்டான்; மூச்சை அடக்கிச் செத்தவன்போல் கிடந்தான். அதற்குள் கரடியும் படுத்தவன் அருகில் வந்தது. அவனுடைய முகம், காது முதலியவைகளை மோந்து மோந்து பார்த்தது. அவன் தாஞகச் செத்த பிணம் என்று எண்ணி அப்பால் போய்விட்டது. பின்பு படுத்திருந்தவன் எழுந்திருந்தான்.

மரத்தின் மேல் இருந்தவன் கீழே இறங்கி வந்தான். படுத்து எழுந்தவனைப் பார்த்து ''நண்ப, கரடி உன் காதண்டை வந்து என்ன சொல்லிற்று'' என்று கேட்டான். அதற்கு அவன் ''துன்பம் நேர்ந்தபோது உதவாத நண்பனை நம்பாதே என்று சொல்லிப் போயிற்று'' என்ருன். இக்கதையால் என்ன தெரிகிறது? ஆராய்ந்து சொல்லுங்கள்.

| | | |
|---|---|---|
| எதிர்த்து | வெல்லுவது | வேடிக்கை |
| எதிரில் | தோற்கடிப்பது | அரியதன்மை |
| ஒளிந்து | நேர்ந்தபோது | உதவாத |
| செத்தபிணம் | அண்டை | நம்பாதே |

**கேள்விகள்**

1. கரடியின் நிறம் என்ன? அதன் உடல் எல்லாம் எப்படி இருக்கும்?
2. அதனிடம் உள்ள ஓர் அரிய தன்மை என்ன?
3. இரண்டு நண்பர்களின் கதையைக் கூறுக.

# 28. ஆறு

'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்று ஔவையார் சொன்னர். அதை நீங்கள் மேல் வகுப்பில் படிப்பீர்கள். ஆறு ஊருக்கு அழகைத் தரும். ஆற்றை அடுத்துள்ள இடங்கள் செழிப்பாக இருக்கும். அவ்விடங்களில் நன்செய்ப் பயிர்களும், பழமரங்களும் நன்ருக வளரும். பெரிய நகரங்கள் பெரும்பாலும் ஆற்றங்கரையிலேயே அமைந் திருக்கும்.

ஆற்றின் இரண்டு பக்கமும் மரங்களடர்ந்த சோலேகளும், படுகைகளும் பார்வைக்கு அழகாக இருக்கும். ஆறு எவ்வாறு உண்டாகிறது? மழைக் காலங்களில் மலேகளிலும், காடுகளிலும் மழை மிகுதியாகப் பெய்யும். மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கி ஓடுவது நீரின் இயல்பு. மலேகளும், காடு களும் மேடான இடங்கள். அவ்விடங்களில் பெய்யும் மழைநீர் கீழ் நோக்கி ஓடிவரும். மலேகளி லிருந்து. கீழ் நோக்கி ஓடிவரும் நீரை அருவி என்பார்கள். பல அருவிகள் ஒன்று சேர்ந்து ஆறு ஆகும். பெருங் காடுகளில் பெய்த மழை நீர் ஒன்று சேர்ந்து ஆருக ஓடிவரும்.

ஆறுகள் சமநிலங்களின் வழியே பாய்கின்றன. ஆதலால் அவ்விடங்கள் நீர்வளம் பெறுகின்றன. ஆறுகளின் குறுக்கே அணேகள் கட்டி நீரைத் தேக்கி வைப்பார்கள். அவ்வாறு தேக்கி வைப் பதால் பெரும்பாலும் ஆண்டு முழுவதும் ஓரளவு நீர் ஆற்றில் ஓடக் கூடும். ஆற்று நீரைக் கால் வாய்களில் திருப்பி, அக்கால்வாய்களிலிருந்து வயல்களுக்குப் பாய்ச்சுவார்கள். ஆற்றில் வெள்ளம்

வரும்போது ஏரி குளங்களையும் நிரப்பிக் கொள் வார்கள்.

ஆறுகளால் நமக்கு உண்டாகும் பயன்களில் முதன்மையானது நீர்ப்பாசனம். மேலும் ஆற்று நீர் குளிக்கவும், குடிக்கவும் பயன்படுகிறது. ஓடும் நீரில் குளிப்பது உடலுக்கு நலம் தரும். ஓடும் நீர் தூய்மையானது. என்றாலும், புதிய வெள்ளம் வரும்போது சிலநாட்கள் ஆற்றில் குளிப்பதும், ஆற்றுநீரைக் குடிப்பதும் கூடாது. ஏனென்றால் புதிய வெள்ளத்தில் குப்பை கூளங்கள் கலந்து வரும். நாட்கள் செல்லச் செல்ல நீர் தூய்மை பெற்றுவிடும். பிறகு அதில் குளிக்கலாம்; அந் நீரைக் குடிக்கலாம்.

ஆறுகளால் மக்கள் அடையும் பயன்கள் மிகப் பல. ஆதலால் ஆற்று நீரைத் தூய்மை கெடாமல் பாதுகாக்க வேண்டும். தொத்து நோய் உள்ள வர்கள் ஆற்றில் குளிக்கக்கூடாது. அவர்களுடைய துணிகளையும் துவைக்கக் கூடாது. துறைகளில் சேரும் குப்பை கூளங்களை அவ்வப்போது அப்புறப் படுத்தவேண்டும்.

தமிழ் நாட்டில் ஓடும் ஆறுகளுள் காவிரி, வைகை, தாம்பிரபரணி என்பவை பெரிய ஆறுகள். இவைகள் மேற்குத் தொடர்ச்சி மலையில் தோன்றிக் கிழக்கு நோக்கி ஓடிவருகின்றன. கடைசியாக வங்காளக் குடாக் கடலில் சேருகின்றன.

இவைகளைத் தவிர வேறு பல சிற்றாறுகளும் ஆங்காங்கு ஓடுகின்றன. காடுகளிலிருந்து பெருகி வரும் ஆற்றுக்குக் காட்டாறு என்று பெயர். காட்டாறுகளில் திடீரென்று வெள்ளம் வரும். ஆனால் சில நாட்களில் வடிந்து விடும். ஆண்டு

முழுவதும் நீர் ஓடும் ஆறுகளை உயிர் ஆறுகள் (ஜீவநதிகள்) என்று சொல்வார்கள்.

| | | |
|---|---|---|
| ஆறு | காட்டாறு | ஓரளவு |
| மிகப் பல | துறை | வெள்ளம் |
| இயல்பு | அணை | வடிந்துவிடும் |
| அருவி | தேக்கி | பெருகும் |

### கேள்விகள்

1. நீரின் இயல்பு என்ன ?
2. காட்டாறு என்று எதற்குப் பெயர் ?
3. தமிழ் நாட்டில் ஓடும் ஆறுகளுள் ஒன்று கூறு ?
4. காவிரியாறு எந்தக் கடலில் கலக்கிறது ?
5. அணை கட்டி நீரைத் தேக்குவதால் என்ன பயன்?

## இலக்கணம்

தமிழில் எழுவாயும் பயனிலையும் ஒத்திருக்க வேண்டும்.

(உ - ம்.) கோவிந்தன் வந்தான்.
கமலம் பாடுகிறாள்.
பிள்ளைகள் ஆடுகிறார்கள்.
பசு மேய்கிறது.
குதிரைகள் ஓடுகின்றன.

இவைகளில் எழுவாய்களுக்குத் தக்கபடி பயனிலைகள் இருப்பதைக் கவனி.

பின்வரும் வாக்கியங்களில் எழுவாய்க்குத் தக்கபடி பயனிலையைத் திருத்தி எழுது :—

1. கண்ணகி வந்தான்.
2. கோவலன் சமைத்தாள்.
3. பிள்ளைகள் எழுதுகிறான்.
4. தம்பி எழுதினார்கள்.
5. மரமானது வளர்ந்தன.
6. செடிகள் பூத்தது.

# 29. ஆடிப் பதினெட்டு

1. ஆடிப் பதினெட்டுப் பண்டிகைக் காவேரி
   ஆற்றினைப் பூசித்துப் போற்றிடுவோம் !
   கூடிப் பணிந்து குலதெய்வம் காத்திடக்
   கும்பிடுவோம் இனித் துன்பம் இல்லை !

2. வெள்ளப் பெருக்கினைப் பார்க்கையிலும் அதன்
   வேகத்தின் சத்தத்தைக் கேட்கையிலும்,
   உள்ளம் திகைத்தொரு உண்மை அறிவினை
   ஊட்டுது தெய்வத்தைக் காட்டுது பார் !

3. காடும் மலையும் கிடுகிடுக்க அந்தக்
   காட்டு மிருகங்கள் ஓட்டமிட,
   'ஓடும் நதியிலே அத்தனைத் தண்ணீரை
   ஊற்றுவதார் ?' என்ற மாற்றம் வரும்.

4. நேற்று நடந்திட்ட மக்களின் பாதங்கள்
   நீற்று நெருப்பெழக் கொப்பளித்த
   ஆற்றிலே இன்றைக்கு அத்தனைத் தண்ணீர்
   அப்படி வந்ததும் எப்படியோ !

5. அன்னம் அளிப்பவள் காவேரி ; நல்ல
   ஆடை கொடுப்பவள் காவேரி ;
   இன்னும் மனிதர்க்கு வேண்டிய இன்பங்கள்
   யாவையும் காவேரியே தருவாள்.

6. யாருக்கு எப்படி ஆனாலும் இந்த
   ஆற்றங்கரையில் வசிக்கும் எங்கள்
   ஏருக்கு நீர்தந்து யாருக்கும் சோறு ஊட்டும்
   எங்கள் குலதெய்வம் காவேரி !

—நாமக்கல் கவிஞர்.



## 30. விறகுவெட்டி வேலன்

ஓர் ஊரில் வேலன் என்னும் ஏழை ஒருவன் இருந்தான். ஏழையாய் இருந்தாலும் பிறரிடம் சென்று இரந்து உண்பதில் அவனுக்கு விருப்ப மில்லை. உழைத்தே பிழைக்க வேண்டு மென்பது அவன் எண்ணம்.

ஆகையால் அவன் நாள்தோறும் நல்ல கோடரி ஒன்றை எடுத்துக் கொள்வான். ஓர் ஆற்றங்கரைக் குச் செல்வான். அங்குள்ள படுகையில் நல்ல காய்ந்த புளிய மரங்களைப் பார்த்து வெட்டுவான். தன்னுல் தூக்கமுடிந்த வரையில் விறகுகளைக் கட்டாகக் கட்டுவான்; தலையில் தூக்கிக்கொண்டு ஊருக்குள் வருவான்; கேட்பவர்களுக்கு நியாய மான விலையையே சொல்லுவான். அவன் பேரா சைப்படமாட்டான். அதனுல் அவன் கொண்டு வரும் விறகையே மக்கள் காத்திருந்து வாங்கு வார்கள்.

வழக்கம் போல் வேலன் ஒரு நாள் விறகு

வெட்டச் சென்ருன். அன்று ஆற்றின் கரையோரத்தில் உள்ள மரத்தில் அவன் விறகு வெட்டிக் கொண்டு இருந்தான். அப்போது அவனுடைய கோடரி கைநழுவி ஆற்றில் விழுந்து விட்டது. உடனே வேலன் திகைத்துப் போஞன். "இன்றைக்கு என் பிழைப்பே போய் விட்டதே. பெண் சாதியும் குழந்தைகளும் பட்டினி கிடக்கவேண்டியிருக்குமே. ஆண்டவனே! நான் என்ன செய்வேன்" என்று வருந்திஞன்.

உடனே ஒரு வனதேவதை அவன் முன் தோன்றிற்று. அது அவனைப் பார்த்து "ஏனப்பா வருத்தப்படுகிருய்" என்று கேட்டது. அவன் என் கோடரி கைநழுவி ஆற்றில் விழுந்து விட்டது. ஆற்றிலே வெள்ளம் அதிகமாக இருக்கிறது. நான் எப்படி அதை எடுப்பேன்? என் பிழைப்பே போய் விட்டதே. நான் என்ன செய்வேன்?" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே சொன்ஞன்.

வனதேவதை "அப்பா! கவலைப்படாதே" என்று சொல்லிற்று. உடனே ஆற்றில் மூழ்கியது. ஒரு தங்கக் கோடரியை எடுத்து வந்தது. அதைக் காட்டி "இது உன் கோடரியா?" என்று கேட்டது. அவன் "இல்லை" என்ருன். மறுபடியும் அத் தேவதை ஆற்றில் மூழ்கிற்று. ஒரு வெள்ளிக் கோடரியை எடுத்து வந்தது. "இது உன் கோடரியா?;' என்று கேட்டது. வேலன் அதையும் "இல்லை" என்ருன். மூன்ரும் முறையும் தேவதை நீரில் மூழ்கியது. ஓர் இரும்புக்கோடரியை எடுத்து வந்தது. "இதுவா உன்னுடையது?" என்று கேட்டது. "ஆ! இதுதான் என் கோடரி" என்று சொன்ஞன்.

வனதேவதை அந்தக் கோடரியை அவனிடம் கொடுத்தது. மேலும் அவனைப் பார்த்து " நீ உண்மையுடையவனாக இருக்கின்றாய். ஆதலால் உன்னுடைய உண்மைக்காக நீ இந்தத் தங்கக் கோடரியையும், வெள்ளிக் கோடரியையும் பரிசாக எடுத்துக் கொள் " என்று சொல்லிக் கொடுத்தது. உடனே மறைந்து விட்டது.

| | | |
|---|---|---|
| இரந்து | பேராசை | இரும்புக் கோடரி |
| படுகை | திகைத்து | பரிசாக |
| பிழைப்பே | வருத்தம் | உழைத்து |
| மூழ்கியது | கண்ணீர் | கைநழுவி |
| வனதேவதை | நியாயமில்லை | பட்டினி |
| வெள்ளி | தங்கம் | |

### கேள்விகள்

1. வேலனுடைய விருப்பம் என்ன ?
2. மக்கள் வேலன் விறகையே வாங்கியது ஏன் ?
3. கோடரி எவ்வாறு ஆற்றில் விழுந்தது ?
4. அப்போது அவன் எவ்வாறு வருந்தினான் ?
5. வேலன் எவைகளைப் பரிசாகப் பெற்றான் ?

### பயிற்சி

கோடுகள் உள்ள இடங்களை நிரப்பிப் படி :

1. வேலன் காட்டிற்குச் சென்று விறகு —— .
2. அதை விற்றுப் —— .
3. ஒரு நாள் அவனுடைய கோடரி நீரில் —— —— .
4. வனதேவதை அவன் முன் —— .
5. ஆற்றிலே வெள்ளம் —— —— .

## 31. நிறுத்துக் குறிகள்

நாம் படிக்கும்போது கேட்பவருக்கு கருத்து நன்ருக விளங்கும்படி அங்கங்கே நிறுத்திப் படிக்க வேண்டும். எங்கெங்கே எவ்வளவு நேரம் நிறுத்த வேண்டும், எந்த விதமான உணர்ச்சியுடன் படிக்கவேண்டும் என்பதற்குச் சில அடையாளங் கள் இடுகின்ருேம். அவை நிறுத்துக் குறிகள் எனப்படும். அவற்றுள் **முற்றுப்புள்ளி, கால் புள்ளி, மேற்கோள் குறி** இவற்றைப் பற்றி இங்குப் படிப்போம்.

. இது **முற்றுப்புள்ளி.** இதை ஒவ்வொரு வாக் கியத்திலும் கருத்து முடியும் இடங்களில் இட வேண்டும்.

(உ - ம்.) நாய் வீட்டைக் காக்கும்.

கதர் ஆடைகள் மிகச் சிறந்தவை.

சோழநாட்டில் காவிரியாறு ஓடுகிறது.

, இது **கால்புள்ளி.** ஒரு வாக்கியத்தில் சிறிது நிறுத்தவேண்டிய இடங்களிலும், கூப்பிடுவதைத் தெரிவிக்க வேண்டிய இடங்களிலும் இக்குறியை இடவேண்டும்.

(உ - ம்.) (1) நாய் உரொட்டி, சோறு, பால் முதலிய வற்றை உண்ணும்.

(2) கந்தா, நான்தான் முதலில் நொண்டி யடிப்பேன்.

(3) இராமா, நூல் கண்டை எடுத்துவா.

“ ” இது மேற்கோள் குறி. பிறர் சொல்லியதை அப்படியே நாம் எடுத்துச் சொல்லும் பொழுது அச்சொற்களுக்கு இருபுறத்திலும் இக் குறிகளை இடவேண்டும்.

(உ - ம்.) (1) “இளமையிற் கல்” என்று ஔவையார் சொன்னார்.

(2) வனதேவதை வேலனைப் பார்த்து “நீ உண்மையுடையவனாக இருக்கின்றாய்” என்று சொல்லிற்று.

(3) ஔவையார் “சுடாத பழமே போடு” என்று கேட்டார்.

# 32. ஒற்றுமை

(நாடகம்)

[தகப்பனுர்—நான்கு பிள்ளைகள்—நூல்கண்டு]

**தகப்பனுர்** :—(மூத்த பிள்ளையைப் பார்த்து) இராமா! நீ ஏன் உன் தம்பிகளுடன் சண்டை போடுகிருய்?

**இராமன்** :—என்ன அப்பா! நான் பெரியவனுயிற்றே. என் தம்பிகள் என் பேச்சைக் கேட்க வேண்டாமா?

**கிட்டு** :—அப்பா! அப்பா! அண்ணு என்னை அடித்து விட்டான்.

**முத்து** :—அப்பா! அண்ணு என் புத்தகத்தை எடுத்துக்கொண்டு விட்டான். அதைக் கொடுக்க மாட்டேன் என்கின்ருன்.

**தகப்பனுர்** :—கிட்டு! நீ ஏன் தம்பியுடன் வம்பு செய்கிருய்? அவன் புத்தகத்தை அவனிடம் கொடுத்துவிடு.

**கிட்டு** :—அப்பா! அவன் என் பென்சிலை எடுத்துக்கொண்டு விட்டான்.

**மணி** :—அப்பா! அப்பா! முத்து என் கொய்யாப் பழத்தை எடுத்துக் கடித்துத் தின்று விட்டான்.

**முத்து** :—அப்பா! நேற்று அம்மா எனக்கு ஒரு முறுக்குக் கொடுத்தாள். அதில் பாதியை மணி எடுத்துத் தின்று விட்டான். அதனுல்தான் இன்றைக்கு நான் அவன் கொய்யாப் பழத்தை எடுத்துத் தின்றேன்.

**தகப்பனுர்** :—இனிமேல் நீங்கள் சண்டை போட்டுக் கொள்ளாமல், சேர்ந்திருக்க ஒருவழி

செய்கிறேன். இராமா! அந்தப் பெட்டியைத் திறந்து உள்ளே இருக்கும் நூல் கண்டை எடுத்து வா.

**இராமன்** :—இதோ நூல் கண்டு.

**தகப்பனுர்** :—இந்தா ஒரு முழம் நூலை உன்னிடம் தருகிறேன். அதை நீ அறுக்க முடியுமா பார்.

**இராமன்** :—இந்த நூலை அறுப்பது பெரிதா? இதோ அறுத்துவிட்டேன் பாருங்கள்.

**தகப்பனுர்** :—கிட்டு! உன்னுல் அறுக்க முடியுமா?

**கிட்டு** :—ஓ முடியும்.

**தகப்பனுர்** :—முத்து, உன்னுல் முடியுமா?

**முத்து** :—இதோ நானும் அறுத்து விட்டேன்.

**தகப்பனுர்** :—மணி! நீ சிறுவன். உன்னுல் முடியுமா?

**மணி** :—நானும் அறுத்து விட்டேனே!

**தகப்பனுர்** :—சரி. இப்பொழுது நான்கு நூல்களை ஒன்ருக முறுக்கித் தருகிறேன். அறுங்கள் பார்ப்போம்.

**இராமன்** :—கொடுங்களப்பா. அறுத்துப் பார்க்கிறேன். (அறுத்துப் பார்த்து) முடியவில்லையப்பா. நீங்கள் தனித்தனியாக இருந்த நாலு நூலையும் ஒன்ருகச் சேர்த்து முறுக்கி விட்டீர்கள். அதனுல் எப்படியப்பா அறுக்க முடியும்? கையெல்லாம் வலிக்கிறதப்பா.

**தகப்பனுர்** :—நீங்கள் யாராவது அறுத்துப் பார்க்கிறீர்களா?

**கிட்டு** :—அண்ணனுலேயே முடியவில்லையே! எங்களால் எப்படியப்பா முடியும்?

**தகப்பனர்** :—நூல் தனித்தனியாக இருக்கும் போது உங்களால் அறுக்க முடிந்தது. ஒன்ருய்ச் சேர்த்து முறுக்கினபொழுது அதற்கு வலிமை மிகுந்துவிட்டது. அதனுல் அதை அறுக்க முடிய வில்லை. ஆதலால் நீங்கள் எல்லோரும் சேர்ந்து ஒற்றுமையாக இருங்கள். அப்பொழுதுதான் உங் களுக்கு வலிமை.

பாட்டு (எல்லோரும் சேர்ந்து பாடுதல்)

ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே ;
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும் ?

| | | |
|---|---|---|
| மூத்த பிள்ளை | ஞானம் | ஒற்றுமை |
| தனித்தனியாக | முழும் | வலிமை |
| வழி செய்கிறேன் | முறுக்கி | நீங்கில் |
| ஒன்றுபட்டால் | வாழ்வு | நன்று |
| அனைவர்க்கும் | தாழ்வு | தேர்ந்திடல் |

**பயிற்சி**

இடங்களுக்குத் தக்க நிறுத்துக் குறிகளை இடுக :—

(1) எங்கள் ஆசிரியர் மிகவும் நல்லவர்
(2) தக்கிளி இராட்டை இவைகள் நூல் நூற்கும் கருவிகள்
(3) கண்ணன் ஒட்டை எடுத்து வை என்ருன்
(4) மதுரை ஒரு பெரிய நகரம்
(5) கண்ணு என் பந்தைக் கொடு
(6) மாமா நாளை வருவேன் என்று சொன்னர்

## வெற்றி வேற்கை

1. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
   பெரியோ ராயிற் பொறுப்பது கடனே.

2. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயிற்
   பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே.

3. நூருண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
   நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

4. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
   இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

5. கற்கை நன்றே கற்கை நன்றே
   பிச்சை புகினுங் கற்கை நன்றே.

6. கல்லா வொருவன் குலநலம் பேசுதல்
   நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.

7. எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும்
   அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பர்.

8. குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
   நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்.

9. சிறப்புஞ் செல்வமும் பெருமையு முடையோர்
   அறக்கூழ்ச் சாலை யடையினு மடைவர்.

10. அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
    அரசோ டிருந்தர சாளினு மாளுவர்.

11. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே யழியினு மழிவர்.

12. எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாயினு மாகும்.

13. பெற்றமுங் கழுதையு மேய்ந்த வப்பாழ்
பொற்றொடி மகளிரு மைந்தருங் கூடி
நெற்பொலி நெடுநக ராயினு மாகும்.

14. பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.

15. மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையாற்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

—அதிவீரராமபாண்டியர்.

## வாக்குண்டாம்

நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். (1)

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். (2)

உற்ற இடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்? (3)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றேஎ—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி இருப்பதுவும் நன்று. (4)

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதேஎ—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ
டிணங்கி இருப்பதுவும் தீது. (5)

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை. (6)

பண்டு முளைப்பது அரிசியே யானாலும்
விண்டுமி போனல் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். (7)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம். (8)

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மே லிட்ட கலம். (9)

அடக்க முடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வரும்அளவும்
வாடி இருக்குமாம் கொக்கு. (10)

அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு. (11)

கற்பிளவோடு ஒப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோடு ஒப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்ருேர் சினம். (12)

நற்ரு மறைக்கயத்தில் நல்அன்னம் சேர்ந்தாற்போல்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். (13)

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். (14)

மன்னனும் மாசறக் கற்ருேனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்ருேன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை கற்ருேற்குச்
சென்ற இடமெல்லாம் சிறப்பு. (15)

—ஔவையார்.

